

ஸ்ரீ குருப்பியோநம:

# அருள்ஞான தீபம்.



இஃது

திருவண்ணாமலையிலெழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ சர்க்குருசுவாமி அவர்களால்

இயற்றப்பட்டு

---

மாணாக்கர்

நன்னிலம் விண்ணுபுரம் நாலாங்கட்டளை

ஸ்ரீமான் அருணாஜலவன்னியரவர்களால்

சிதம்பரம்

விநாயகசுந்தரவிலாசம்பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

---

15—10—1915





திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ ஸத்குருஸ்வாமிகள்.



உ

அரி ஸ்ரீகணபதயேநம:

அவிக்கினமஸ்து.

ஸ்ரீகுருப்யோநம:

# அருள்ஞான தீபம்.



## குருவணக்கம்.

ஓங்காரமானபொருள் மூன்றாய்ப்பிரிந்துமுதல்
முக்கோண வட்டமாய் மூலமொருசாலமாய்
பாலகணநாயகனும் அம்மணியும் ஆதியாய்
எட்டுமாய்ரெண்டுமாய் அஞ்சுமாய்மூன்றுமாய்
அகாரமாதிமுதல் அன்பத்தோரக்ஷரமாய்
ஆதாரமாறுமாய் ஆத்தியந்தசூன்னியமாய்
சத்துமாய்சித்துமாய் சுத்தசிவசத்தியாய்
சித்தமதுகுடிகொண்ட குருவானதெய்வமே. (1

அப்பனேயத்தனே அன்புடையகர்த்தனே
இன்பமுடனெவ்வுயிரும் ஆண்டஜெகதீசனே
சுத்தபரிபூரண சுகானந்தவாரியே
சித்தமதுகுடிகொண்ட குருவானதெய்வமே

ஈசனே னேசனே! இகபரவிலாசனே நாயடியன்
னெளியவனையாட் கொள்ளுமய்யனே
அத்துவிததத்துவமசி அருள்ஞானதீபமே
எத்தொழிலிலெப்பொழுதும் அஞ்சலிசெய்குவாம். (2)
அன்புருகியருள்பெருகி ஆறுய்எழுந்தருளி
இன்பமுடனெங்குமாம் யேகாந்தசித்தனுகி
வேதாந்தசித்தாந்த சமரசசமானமாய்
சாதுவாய்போதுவாய் காதிலுபதேசமாய்
ஆதியாயனந்தமாய் அண்டபகிரெண்டமாய்
சத்துமாய்சித்துமாய் முக்திக்குவித்துமாய்
அரிவிலரிவருளதாம் பரமகுருபதமலரை
காளிலிதுகருதிதினம் அஞ்சலிசெய்குவாம். (3)
அத்தரணமன்பருட சித்தமதிலின்பமாய்
சுத்தபரிபூரண சுகானந்தவாரியாய்
உத்தரணஉலகமதி லாணுய்ஊனுய்
சப்தரசபரிசாதி வானுதிபூதமாய்
நானெனதனேகமாய் நானுவிசாரமாய்
கோரமாய்மூடமாய் காமாதிவைரியாய்
எம்மனதையேனறியேன் யேழையிவனெளியவன்
அய்யனுடமெதியடி யிதென்சிரசில்வாழுவாம். [4]

சஞ்சலமனக்குரங்கை சாடுமோமகங்காட்டை
அஞ்செழுத்தானவாளால் அடியோடேவேறறுத்து
நெஞ்சமேகேள் நேசமானஓரெழுத்தானதீயால்
சஞ்சிதமானபாபக் காடதுபடுதீயாமே.

உ

காப்பு

சோதியெனு மனோன்மணியைத் தியானஞ்செய்து
சுகமான அருள்ஞான தீபம்புகழ
ஆதியெனும் கணபதியும் வல்லபையும்காப்பு
அரசானபிர்மனொடு சரஸ்வதியுங்காப்பு
நீதியெனு மாலுடனே லெட்சுமியுங்காப்பு
நின்றிலங்கும் ருத்திரியும் ருத்திரனுங்காப்பு
ஓதியதோர் மஹேஸ்பரனும் மஹேஸ்வரியுங்காப்பு
உறுதியுள்ள சதாசிவனு மனோன்மணியுங்காப்பே
மணியான ரவிமதியும் சுழிமுனையுங்காப்பு
மகத்தான வேதியனர் தன்பாதங்காப்பு
கனிவான நால்வேதம் அந்தங்காப்பு
கருணைவளர் சாஸ்திரமோராருங்காப்பு
அணியான ஆதார சொரூபங்காப்பு
அருளான அமுர்தரச போதங்காப்பு

கனியானபராபரமாஞ் சோதிகாப்பு
சதாநந்தபூரண மாந்தாய்காப்பாமே. (2)
தாயானசிவயோக மூலங்காப்பு
சகலகலைக்கியான மணிப்பீடங்காப்பு
மாயாதவாசி மலரந்தங்காப்பு
மணிமந்தரநாதவொலி கீதங்காப்பு
சாயாதஅடிமுடியும் நடுவுங்காப்பு
சவுமியமாம்தேவ ரிழிகள்காப்பு
தேயாதவாசியது மவுனங்காப்பு
சிவசிவா அகாரமுடன் உகாரங்காப்பபே. (3)
உகாரமென்ற நாதமது சத்திகாப்பு
உறுதியுள்ள யகாரமது சிவமேகாப்பு
சிகாரமென்ற சோதியது வாலைகாப்பு
சிவசிவாமாகார மென்றமவுனங்காப்பு
வகாரமென்ற பஞ்சகண தீட்சைகாப்பு
மகத்தான சடாட்சரமாம் ஆதிகாப்பு
நகாரமுதல் யகார வரை ஓங்காரத்தில்
நாம்நின்ற சூட்சமது ஆதிகாப்பே. (4)
ஆதிகுருவேதியர் தன்பாதம் போற்றி
அருள்பெருகும் கேசரியை பூசைபண்ணி

சோதியெனு மருள்ஞானதீபம் போற்ற
சுயஞ்சோதி ஆதியந்த சுழினைகாப்பு
நீதியுடனுதார மூலந்தன்னில்
நின்றிலங்கும்.பிராண நாயகனார்காப்பு
ஓதியவேதோர்கலைமகளும் பூமகளுங்காப்பது
உண்மையுள்ள சேய்மகளுந்தாய் காப்பாமே. (5)
கண்ணுயிற் குருமணிபாதங் காப்பு
கருணையுடை திருமணிதாய்காப்பு.



உ

ஸ்ரீ சர்க்குருவே நம:

# அருள்ஞான தீபம்

---

## வசனம்.

### முதலாவது சிஷ்யன் கேட்கிறான்.

ஆதிமூல ஸ்ரீபரமானந்த வஸ்துவாம், பரமாத்ம சுரூபத்தை அறியும் பொருட்டு சிரத்தைமிகுந்த சாந்த குணமுடைய ஒரு சிஷ்யன்பரிசுத்தமுடையவரான ஒரு ஞானாசாரியாரிடம் சேர்ந்து திருவடிக்கித்திருத்தெண்டமிட்டு அஞ்சலியஸ்தனாய் நின்று கேட்கிறான். ஓமல் தேசிகரேபரமகிருபாளுவாய் அடியேனைப்பார்த்துகார்த்து அருளவேண்டுமென்று அபேக்ஷிக்கிறேன். என் உடல், பொருள், ஆவி மூன்றும் நின் திருவடிக்கி அர்ப்பணம். அடியேனுடைய விண்ணப்பமாவது, பராபரமாயும் பரமானந்த சொரூபமாயும் பரிபூரணமாயும் இருக்கும் பரமாத்ம சொரூபத்தை அடியேனுக்குப் பார்க்கவேணுமென்று அதிக ஆவலுடன் அநேக சாஸ்திரங்களிலும், அனேக தீர்த்தங்களிலும் அநேக

க்ஷேத்திரங்களிலும், அநேக மதாசாரியர்களிடத்தி லும், உபநிஷத்தாதி சாரமானமகாவாக்கியங்களிலும் தேடி அலைந்தேன். அந்த பரமானந்த சொரூபத்தை அடியேன் ஓரிடத்திலும் காணேன். ஓ ஆண்டவனே! அடியேனுடைய ஜென்ம சங்கடம் போகும்படி, நின் திருவடி திருவருளான வாளினால் அடியேனுடைய சந்தேகமெல்லாம் அடியோடி அறுத்து காத்து ரக்ஷி க்கவேண்டுமென்று அபேக்ஷிக்கிறேன்.

இந்தப்படி கேட்டுக் கொண்ட சிஷ்யனைப்பார்த்து குருவானவர் சொல்லுகிறார். ஓ வாரீர்மகனே கேள்! உன்னை நீ நம்பினால் உள்ளபடி மெய்யாகுமென்பார். பொய்யை மறந்தால் மெய்யைப் பார்க்கலாம். மெய்யு ணர்ந்த ஞானிகள், உள்ளம் மெங்கும் பரிபூரணமாம். சுபம் பிரகாசமாய், விளங்கும் மெய்மறந்த மூடர்களு க்கு, மெய்யேது, ஆதலால் இந்த மெய், பொய், இர ண்டும் உன்னிடத்திலே பார்க்கும்போது, சகல சந்தே கங்களும் தீரும். ஓ மகனே கேள்! எதார்த்த ஞான த்தை மறைப்பது மனந்தான். சுருதிப் பிரமாணங்களா வது பெரியோர் வாக்கியமாவது அசத்தியமாய் நினைந் தால் கர்ப்பகாலம் நரகமனுபவிக்கவேண்டும். எங்கும்

பரிபூரணமாயிருக்கும் பரமாத்மாவை எல்லோருக்கும் பார்க்கக்கூடாதா என்றால் பார்க்கக்கூடாது. அதாவது அவ்வியக்தம் ஆதலால் முக்குண மூர்த்திகளாலும், பார்க்கக்கூடியதல்ல. அது முக்குணத்திற்கும் அதிதப்பொருளாம் பரமாத்மா, அந்த பரமாத்மவஸ்துவானது பரிசுத்தாராய் குருவருள் பெற்றவர்களுக்கு பார்க்கலாம். இதற்கு சந்தேகமில்லை, இது பரமரகசியம். ஆனாலும் அந்த பரிசுத்தமான குணத்துக்கு இருப்பிடம் பரமரகசியம், அதற்கு ரூபமுண்டு. அதை முதலாவது பார்த்தால் அதினால் பரிபூரணவஸ்து இது தானென்றும் அதைத் தொட்டுக்காட்டும் அப்போது சகல சந்தேகங்களும் தீரும்.

சிஷ்யன் கேட்கிறான்:—எங்கும் பரிபூரணமான வஸ்துவை பார்க்கக்கூடாதென்றும் ரகசியமான வஸ்துவை பார்க்கக்கூடும் என்றும் முன் கூறியது இதில் பரிசுத்தமான குணத்துக்கு யிருப்பிடம் எங்கே, இதற்கு ரூபம் என்ன? இதற்கு லெக்ஷணம் என்ன? இதனுடைய மகிமை என்ன? அதை அடியேனுக்கு உண்மையாக விளங்கும்பொருட்டு உபதேசித்தருள வேணுமென்றும் கேட்டுக்கொண்ட சிஷ்யனைப் பார்த்து குருவா

ணவர் திருவாய்மலர்ந்தருள்வதாவது:—ஓ வாரீர் மகனே! பரிசுத்தமான குணமென்பது முக்குணத்துக்கும் அதீதமாயும், பிர்ம்ம சந்நிதானத்தின்கண் சுபம்பிரகாசமாயும், அக்கினியில் சூடுபோல் அபிந்நமாயும், அபேதமாயும் ஒரு சத்தியுண்டு. அதற்கு நாமம் ஞானசிற்சத்தி என்றும் குருவென்றும் நித்திய சத்திய சுத்த தத்துவ வித்தி என்றும், பராபரை என்றும், மற்றும் அநேக நாமங்கள் சொல்வதுண்டு. அதற்கு ரூபமாவது ஸ்ரீ சற்குருவின் திருவருள் பிரசாதமாம். அதற்கிருப்பிடமாவது நித்திய சுகத்திலும் சாசுவதமான தர்மத்திலும் நிர்விகல்ப்ப அபிக்கியமான மோக்ஷசுகத்திலும் ஸ்ரீ சற்குருவின் திருவடிக்கு அடியான மிதியடிக்கும் அடியாயும், அடியார்க்கும் அடியாயும் இருக்கும். அதின் லெக்ஷணமாவது சச்சிதானந்தம் அதன் மகிமை அளவிட-முடியாது. குரு என்பவர் யார் என்றால் வைராக்கியம், சிவகாருண்ணியம், குருபக்தி, பரக்கியானம் இது நாலுமுடையவர் தான் உலகத்தில் தேசிகர். அதினுடைய அனுபோகமாவது ஸ்ரீ சர்க்குருவின் திருவருளான பரிபூரண விக்ஞான சுரூபாநந்தமாம். ஓ புத்திமானே கேள்! இதுவே சித்தாந்த

முத்தி. இது சகல மதசம்மதமாயு மிருக்கும். சந்தே கம் வேண்டாம். சந்தேகமானது குணபேதம். ஸ்ரீ சர்க்குருவின் திருவருள்ஞான சிற்சத்தியால் உணர் வதே திடக்கியானம். இதற்கு முதலாவது சித்தம் பரிசுத்தமாக வேணும்.

சிஷ்யன்:—ஓசுவாமி சித்தமாவது என்ன? சித்தம் அசுத்தமாக்குவது எது? அதை சுத்தமாக்கும் உபாயம் எது?

குரு:—ஓ மகனே கேள்! சித்தமானது சிதாகா சம். இதை அசுத்தமாக்குவது இராகத்வேஷாதி அபி மான விர்த்திகளாம். சித்தம் சுத்தமாக்குவது மகாப் பிரயாசம். ஆனாலும் அல்பமான சரீரத்தில் சிற்றின் பமான இகபர போகத்தின் ஆசையை விட்டு ஒரு பலனையும் கோராமல் பேரின்பமான சுகத்தில் இச்சை கொண்டு, நல்ல சர்க்கருமங்களை ஈசுவரார்ப்பணம் செய் யவும், மகான்களுடைய பாதபூஜையும், இந்தப் படி நிஷ்காம பக்தி செய்தால் அந்தக்கரணம் சுத்தமாகும். சித்தம் பரிசுத்தமானால் பகவானே குருவாய் கற்பக விருக்ஷத்தைப்போல உபதேசிக்க வருவார். குரு உப தேசமாவது நித்தியம் இன்னதென்றும், அநித்தியம்

இன்னமென்றும், விபரமாக காட்டி தெளிவடையச் செய்வதாம். அதாவது இந்திரசாலகருடைய மாயா வித்தையைப்போல மாயாஜாலமாம் இந்தப் பிரபஞ்சம். அதாவது பிரகிருதி முதல் இருபத்துநாலு தத்துவங்கள் தோற்றியது, அந்த இருபத்துநாலு தத்துவங்களில் பிரிவானது தொண்ணூற்ருறு தத்துவங்களாய் தோற்றியது. அதாவது மூலப்பிரகிருதி முதல் குணமூன்றும், ஈசன்மார் மூன்றும், பூதங்களைந்தும் அதின் தன்மாத்திரை அய்ந்தும், இந்திரியம்இருபதும் யீஷணம் மூன்றும், தாபம் மூன்றும், தூஷண மூன்றும், அவஸ்தை மூன்றும், தேகம் மூன்றும், பிராணுதி பத்தும், கரணங்களெட்டும், ஆதாரமாறும், கோச்மஞ்சும், தாதுக்களேழும், ராகத்துவேஷாதி எட்டும், சிவன் ஒன்றும் ஆக தொண்ணூற்ருறு தத்துவங்களாம். இந்த தேகாதி பிரபஞ்சமாவது இந்த தத்துவங்கள் தொண்ணூற்ருறும் உண்மையாய் அறியும் போது இதில் வசிக்கும் ஜீவாத்மாவுக்கு வாளும் உறையும் போல யாதொரு பற்றுதலும் கிடையாது என்பது நிச்சயம். அதாவது இந்த தொண்ணூற்ருறு தத்துவங்களும் மித்தை என்றறியும் போது சிவாதமா

என்பர் சர்வ சாக்ஷியாய் சச்சுதானந்தமாய் யேக மாய் விளங்குமென்பது நிச்சயம். இருவினைக்கும் இருவாசனைக்கும் காரணம் இந்த தத்துவங்களாம். சிவன் என்பவர் இதில் சாக்ஷியாயும் ஆகாசம் போல் பரிபூரணமாயும் எதிலும் பற்றற்றதாயும் இருக்கிறது. ஆனாலும் மாயாகுண சூத்திரத்தோடு கூடிய இந்த பிரபஞ்சத்தின் கண்நானெனது என்கிற அத்தியாசத் தினால் சீவன் கர்த்தத்துவ போக்திருத்துவ கர்த்தா நானென்கிற அபிமானத்தினால் பெந்தபாவேன சிவன் துக்கியாய் தோற்றுவதற்கு காரணம் அஞ்ஞானமாம். சிவனென்பவர் எதுவென்றால் மகனே கேள்! சராசரத் துக்கும் அறிவாய் அந்திரியாமியாய் சத்தியமாய் சுத்த மாய் நிற்முக்தனாய் நிரீகனாய் நிர்த்தொந்துவனாய் நிற்வி காரனாய், சர்வத்துக்கும் ஆதார பூதனாய், நிற்மூலமாய் விஸ்வமூலமாய், நிர்மலமாய், நிராகாரனாய், நிர்லீனமாய் அளவிறந்த மகிமையுடையதாய், நிர்ச்சங்கனாய், நிரூப னாய், பரமானந்தமாய் விளங்குவதாம். ஜீவன் இப் படிக்கொத்த ஜீவன் பிரமையடையக் காரணம் சித்த மானது முக்குணத்தோடு சேர்க்கை வாசனை இருந்த மட்டும் ஜீவன் பந்தனென்றும் மூன்று குணங்களையும்

அடியோட தள்ளிவிட்டு நல்லபியர்க்கையாவது ஜீவன் முக்தி என்றும் பெரியவாள் சம்மதம் அரை நிமிஷத்தில் அநேக சங்கல்பம் தோற்றவும். ஒடுக்கவும் ஆவதும் அழிவதும் எல்லாம் மாயாகுண காரியமாம். இந்திரஜாலகன் மறைந்திருந்துகொண்டு காட்டும் யிந்திரஜாலமாவது எல்லோர்க்கும் பார்க்கக்கூடும். அந்த சமயம் அந்த ஜாலக்காரனை ஒருவர்க்கும் பார்க்கமுடியாது அதுபோல் ஜீவன்குணசூத்திரத்திற்குள் மறைந்திருந்து காட்டும் மாயாகாரியமான பிரபஞ்சத்தை எல்லோர்க்கும் பார்க்கமுடியும் அதுகளுக்கெல்லாம் அந்தரியாமையாய் யிருந்த ஜீவனை ஒருவர்க்கும் பார்க்கமுடியாது என்பது தாத்பரியம். அதாவது சீவன் என்பது குணாதீதம் அந்த சீவனுக்கு குணபெந்தமிருந்தமட்டும் குணாதீதமானப்பொருளை பார்க்கமுடியாதென்றும், அந்த குணபெந்தம் விட்டால் சீவன் முக்குணத்திற்கும் அதீதப்பொருளாம் என்பது தாத்பரியம். அதாவது குணசங்கம் விட்டால் மனம் நிர்க்குணமாம். அதாவது குணாதீதமாம். ஆதலால் யிந்த பரமரகசியமான பரமாத்மாவிலிருந்து பரமாநந்தமான சிற்சத்தி பிறந்தது. அந்த சிற்சத்தியின் சுயம்பிர

காசத்திலிருந்தும் சுத்தமான சாத்விகம் பிறந்தது. அந்த சுத்தமான சாத்விகத்திலிருந்தும் அசுத்தமான ரூசதகுணம் பிறந்தது. அந்த அசுத்தமான ரூசத குணத்திலிருந்தும் அஞ்ஞான அந்தகாரமான தாம சகுணம் பிறந்தது. அந்த தாமச குணத்திலிருந்தும் சம்சாரத்துக் கேதுவான தன்மாத்திரைகளும் மகா பஞ்சபூதங்களும் பிறந்தன. அந்த பஞ்சபூதங்களி லிருந்தும் இராகத்துவேஷாதிக் கேதுவான இந்திரி யங்கள்பிறந்தது. அந்த இந்திரியங்களுடைய போக நிமித்தம் சம்சாரக்கூட்டம் பிறந்தது. அதாவது இந்தஸ்தூல பிரபஞ்சமானது உற்பத்திக்குமுன்னும் பி ன்னும்அவ்விபக்தமாயிருந்தது. இப்போதுஸ்தூலமாய் தோன்றியிருந்தாலும் இதுநிலைபல்ல. இந்தப்படி அடிக் கடிஉற்பத்திலயம்உள்ளதாய்த்தோற்றுவதற்குக்காரணம் மாயா. மாயையாவதுமனம். மனசங்கல்பமாவதுவிக்ஷே பம், இதற்கு ஆதியந்தமில்லை இதற்கு அதிஷ்டான மான பிர்மசத்திக்கும் ஆதியந்தமில்லை. இதற்கதீத மான பரமாத்மாவுக்கும் ஆதியந்தமில்லை. ஆதலால் ஞானசாதனங்களில் முக்கியமாவது சாத்விகம். அந்த சாத்விகமடையும் பொருட்டு மார்க்கமாவது எப்படி

யென்றால் முதலாவது துற்சங்கம் விட்டு சற்சங்க பரி சீலனம் ஆர்ப்பசுகத்தி விச்சை இரஜ தாமசமான குண கர்மங்களை தூர தள்ளிவிட்டு சாத்வீகமான சுகர்மங் களை வர்ணாஸ்ரம தர்மங்களின் விதிப்படி பலாபேக்ஷை விட்டு ஈஸ்வரபிரசாதமாக அநுஷ்டிக்கவும் இரண்டா வது முன் கூறிய சுகர்மங்களை அநேக ஜென்ம ஜென் மங்களில் பழகி வந்த சத்புண்ணிய பரிபக்குவமடைந்த புண்ணியாத்பாவுக்கு பகவானே குருவாய் உபதேசிக்க வருவார். அவருடைய பாதசேவையை கொண்டு அநந்நியபக்தி சிரத்தை விஸ்வாசம் வைராக்கியம் சாஸ் திரார்த்த சாரசங்கரகம் விசாரணை செய்யவும் மூன்றா வது ஈஷண மூன்றும் அதின் வாசனை சங்கல்டம் விட்டு விடுவதும் நாலாவது நித்தியா நித்திய வஸ்து விவே கம் ஐந்தாவது முன் கூறிய விவேகத்தினால் வஸ்து நிர்ணயமடைந்து மித்தியாரூபத்தை மறந்திருப்பது தான். ஆறாவது தன் இருதயம் தெளிவடைந்து ஞானோதயமாய் திருவடி நசிப்பதுதான். ஏழாவது வஸ்துவின் சுயம்நிலையடைந்து இரு வாசனைபற்று மவு னசமாதியில் இருப்பதாம். அதாவது தன்னையும் குருவையும் லோகாவஸ்தையும் மறந்து சுழுத்தியா

னந்தம்போல் தூங்காமல் தூங்கி பிரமானந்தமாய் இருப்பதுதான் மவுனசமாதி. இதுவே துரியமாயும் துரியாதீதமாயும் நிரஞ்சனமாயும் பெரியோர்கள் சொல்லுவார்கள். இதையடையும்பொருட்டு முதலா வது மனம் பரிசுத்தமடைய வேண்டும். மனம் சாந்தகுணமடைந்தால் பரிசுத்தம் பார்க்கலாம். பரி சுத்தநிலையடைந்தால் அருள் கிடைக்கும். அவ்வருள் அடைந்தால் பரமானந்த நிலையை அடையலாம். அந்த பரமானந்தமாவது ஞானசிற்சத்தி இந்த பரமானந் தத்தை யனுபவிப்பது அறிவான பரமசிவம் ஆதலால் அறிவான ஆத்மாவும் அதுக்கு விஷயமான ஆனந்த மும் இரண்டல்ல. அதாவது தேனும் சுவையும் போல ஆத்மாவை ஆனந்தம் அறியக்கூடும். ஆனந்தத்தை ஆக்மாவும் சமரசமாய் அறியக்கூடும். அதாவது ஆத் மாவும் ஆனந்தமும் இரண்டறக் கலந்திருப்பதாதலால் பிரகாசமும் தீபமும் போலேயும் அக்கினியும் சூடும் போலவும் சூரியனும் கிரணமும் போலேயும், ஏகமெ ன்றறியும்போது உன்னுடைய சகல சந்தேகங்களும் தீரும். ஓ மகனே கேள்! ஆத்மாவின் தன் குணமே ஆனந்தமென்றறிக. இந்தப்படி ஸ்ரீ சற்குருவின்

திருவருள்பெற்ற சிஷ்யன் வெகுமதி கொண்டு ஆனந்தக் கண்ணீர் அடைந்து இந்திரியங்களையும் மனசையும் மறந்து விட்டு திருவடிக்கி அநேக திருத்தெண்டமிட்டு கிருதாஞ்சலியஸ்தனாய் நின்று கேட்கிறான்.

ஓ சர்க்குருநாதா:—தங்கள் மகா வாக்கியமான அமிர்தத்தை அடிக்கடி பானம் செய்தும் திருப்த்தியடையாமல் பரவசனாயிருக்கும் அடியேனைப் பார்த்து கார்த்து ரெக்ஷிக்கும் பொருட்டு திருவவதாரம் எடுத்தெழுந்தருளி வந்த மாதவமே! தங்கள் திருவடிக்கு அநேக தண்டம் ஆனாலும் அடியேனுடைய சந்தேகமானது ஜீவனும் பரனும் இரண்டாயின் அனேக குணபேதமாயும் அது மாயையினால் வந்ததென்றும் இதுவே பந்தமாமென்றும் பந்தம் விடுவதே மோக்ஷமென்றும் நின் திருவடிமுன் கூறியிருக்கிறது. ஜீவாத்மா பரமாத்மா இரண்டறக் கலந்து யேகமாய் ஆருடமுக்த்தி துவாரமடையும் பொருட்டு கிருபாகடாக்ஷம் செய்தருளவேண்டுமென்ற சிஷ்யனைப் பார்த்து.

குருவானவர் திருவாய் மலர்ந்தருளுவதாவது:—கிட்டவா மைந்தனே கேள்! அயிக்கியமாவது எப்படி என்றால் சகல ஆசையும் விட்டு மிகுதிய உள்ளன்பி

னுல் ஆத்மப் பிரியமாயிருந்தால் அயிக்கியமாம். அயிக்கியமே பிரமானந்தபதம். அதாவது சீவாத்மா, பரமாத்மா இது அவ்வியகத்தமாயும் இருந்ததாதலால் பாமருளுக்கு அயிக்கியமாவது மஹா பிரயாசையே னென்ருல் சீவாத்மா பரமாத்மா இரண்டு பாவனைக்கு மத்தியில் மறைத்துக் கொண்டு அசுத்த மாயா சத்தியிருக்கிறது. அதானது அசுத்த மனம் அந்த மாயமான அசுத்த மனம் பரிசுத்தமடைந்தால் அது நிர்வாணமாம். ஆனுலும் அசுத்த மாயையைநீக்கி மனம் பரிசுத்தமாக்கி சமாதியடைவது மகா பிரயாசம் ஆனுலும் மனும் பரிசுத்தமாகும் பொருட்டு பாமரகசியமாய் ஒரு வழியிருக்கிறது. அதாவது முக்கியமானது சர்க்குரு பக்திசெய்தால் மாயையை கடக்கலாம். மனசையுஞ்செயிக்கலாம். மனோலயமாளுல் மாயை கிடையாது. மாயா ஜெயத்துக்கு மாயையை உபாசிக்க வேண்டும் என்றும் அதாவது அழுக்கைப்போக்குவதற்கு அழுக்குவேண்டுவது போல அசுத்த மாயையை போக்குவதற்கு சுத்த மாயையை உபாசிக்கவேண்டும். அதாவது எப்படி என்ருல் முதலாவது நிஷ்க்காம கர்மத்தினுலும் குருபக்தியினுலும் சித்தம்பரிசுத்தமானுல் அதுவே வித்தை என்

பதாம். மனமாவது வித்தியாவசமானால் அவித்தை தா
னே நீங்கும். அவித்தை நீங்கிவிட்டால் வித்தை என்ப
துங். சிடையாது ஜீவனும் பரனும் யிரண்டறக் கலந்து
சுயம் பிரகாசமாயிருக்கும் அதாவது தீவிர வைராக்கிய
முள்ளசிஷ்யனுடைய அநந்நிய பக்தி லெக்ஷண மாவது
குருசந்நிதாநத்தின் கண் மேகங்களைக் கண்ட மயில்கூட்
டம்போல மயிர்க் கூச்சலிட்டு ஆநந்த கண்ணீரடைந்து
சித்தத்தி லாத்திரத்தையும் ஆத்மாவில் சந்தோஷமும்
அருளில் ஆசையும் புளகாங்கிதமும் சஞ்சலசுரமும்
இந்தப்படி அநேக விதமான சத்விசேஷ லெக்ஷணங்
களையுடைய சிஷ்யனைப் பார்த்து,

ஸ்ரீ சற்குருநாதன் பரமகிருபானுவாய் மாதா
தன் சிசுவைப்போலும் ஆமைமீன் பரவைபோலும்
ஸ்ரீ சற்குருநாதன் சிந்தித்து கண்ணூரப் பார்த்து
கையாலணைத்து தன்னிடபாகம் சேர்த்து அருளுவதா
வது:—அயிக்கியம் இந்த ஸ்தூல அயிக்கியத்தினால்
சூக்ஷ்மமான யேக சுரூபம் அடையலாம். யேக சுரூப
மடைந்தால் கைவல்யமடையலாம். இதற்கு முக்கிய
மானது ஸ்ரீ சற்குருபக்தி ஸ்ரீ சற்குரு பக்தியினால்
சந்தேகமெல்லாம் தீர்ந்து தெளிவடைந்து தன் குரு

வினிடம் வைத்த உள்ளன்பு தான் அயிக்கியம். அது சீவ பரமானந்தமென்றும், முன் கூறியதாற்பரியம். இது கூடாமல் அநேகம் தானம் யோகம் நேமம் எக்கிய ஓமம் தபசு இதைத்தவிர இயமநியமாதி சாதனங்களினாலும் அநேகசாஸ்த்திர பாடங்களினாலும் சாங்கிய யோகாதி விரதம் சாந்திராயணங்களினாலும், அயிக்கியமடைவது கஷ்டம் ஆதலால் இந்த அயிக்கியத்திற்கு திரிகுணமயமான வர்ணாஸ்ரம தர்மங்கள் இல்லாமல் போனாலும் குருபக்தி இருந்தால் அதுவே முக்கியமாவதென்றும் இதற்கு முதலாவது சாத்திகமுபாசிக்க வேண்டுமென்றும் இதினுடைய தாற்பரியம் சாத்திகமாவதற்கு முக்கியம் சத்விருத்தி. சத்விருத்தியினால் சாத்வீகமடையலாம். சத்விருத்தி பழக்கமாவது எப்படி என்றால் துர்ச்சங்கம் விட்டு சர்ச்சங்கப் பழக்கமும், சாதுக்களை உபாசிக்கவும், பூசிக்கவும், வந்தனம் வணக்கம் அடக்கம் பிர்மசரியவிருதம் குரு சேவை இயமநியமாதி சாதனப் பழக்கம் சத்தியம் ஞானத்திலாசை நிற்பயம் மனசுத்தி விஷயவைராக்கியம் நிராசை எதார்த்த ஞானநிஷ்டை இந்திரியசமனம் சாந்தம் எக்கியம் தானம் தபசு அப்பியாசம் அத்

தியயனம் ஆர்ச்ஜபம் இதைத்தவிர கொலை களவு கோபம் டம்ப தூஷணம் இது முதலான துர்க்குணங்களை அடியோடே விட்டுவிடுவதும் தியாகம் சாந்தி பிராணிகளிடத்தில் ஜீவகாருண்ணியம் அகிம்சா சமாதானம் ஆசையடக்கும் ஆத்மசந்தோஷம் இதுக்கெல்லாம் சாத்விகத்திற்கு உதவும்படியாயுள்ள தெய்வ சம்பத்துகள். இவைகள் தவிர அசுர சம்பத்தியாவது எப்படியென்றால் அதனுடைய அநுபவம் துக்ககரமாயிருக்கும் இந்த அசுரசம்பத்திகளையுடைய துன்மார்க்கர்களுக்கு சன்மார்க்கநடை எள்ளளவும் தெரியாது அதாவது ஆத்மசைதன்னியத்தினலுண்டான பிரபஞ்சமும் இதற்கு காரணமான ஆத்மாவும் பொய்யாகி எண்ணிகாணப்பட்ட பிரபஞ்சத்தின்கண் எல்லாம் ஸ்திரீ புருஷாளுடைய சேர்க்கையினல் பிறந்ததென்றும் இதற்கு வேறே ஒரு காரணமும் இல்லை என்றும் ஸ்திரீபுருஷாளுடைய காமம் ஒன்றுமாத்திரம் இதற்கு காரணம் என்றும் ஆத்ம சூன்யராய் அநர்த்தத்திற்கு வேலி கட்டும்போல அற்பபுத்திகளாய் துராச்சாரிகளாய் துஷ்கர்மிகளாய் லோக சத்துருக்களாய் இம்சாபுத்திகளாய் முன் கூறிய நிரீஸ்வரமதம் அவலம்பித்து தெய்வனுஸ்

திராய் லோக நாசத்திற்காக பிறக்கிறார்கள். அசாத்தியமான ஆகாரங்களில் ஆசையுடையவராய் கர்வம், கபடம் டம்பம் பரதூஷணம் இதுகளால் ஞானசூன்யராய் விதியில் நிஷேதமான கர்மங்களை ஆதரித்தவராய் அநாசாரிகளாய் அசூசியான விரத அநுஷ்டானங்களைக்கொண்டு வீண்காலம் போக்குவார்கள் அசுர சம்பத்தி விருத்திகள் இன்னும் கேள்மகனே! மேற்கூறியபடி சீவதிசைகாலபரியந்தம் காமபோகமே நித்திய சுகமென்றெண்ணி இதைத்தவிர வேறொரு சுகமுமில்லை யென்பதாக எண்ணுவார்கள். அநேக ஆசா பாசத்தை யுண்டுபண்ணி அந்தபாசமானதைக்கொண்டு கைகால் விலங்குபோட்டவராய், காமக்குரோதா திவசராய் காமபோகத்திற்குவேண்டி அநியாயமாக பொருள் சம்பாதித்து சேர்ப்பார்கள் இந்தப்படி அநியாயமாக சம்பாதித்து சேர்த்த பொருள்களெல்லாம் என்னுடைய சுயார்ச்சிதமென்றும் எண்ணுவார்கள். என்னுடைய சொந்த சம்பாத்தியமாக இவ்விடத்தில் இப்பொழுது முந்நூறு காணி நஞ்சை இருக்கிறது. இதைத்தவிர இன்னொரு இடத்தில் தொண்ணூறு காணி இருக்கிறது அதோடுகூட இன்னும் பத்துகாணி

சேர்க்கவேணும் அப்போதுதுநூறுரும். அதுக்குநான் ஒரு வழி பார்த்திருக்கிறேன் அதுவும் இதுவும் கூடி நாநூறு காணிசரியாயிருக்கும். அதிலுண்டாகும்தானி யம் கொண்டுநாலைந்துகுடும்பத்தில்வசிப்பவர்களுக்கெல் லாம் நன்றாய் சாப்பிட்டு ஆனந்தமாயிருக்கலாம். இப் போது என்னுடைய சொந்த சம்ரக்ஷணைக்கு ஆறு குடும்பம் இருக்கிறது ஆறு குடும்பத்திலும் கூடி ஐம்பத்தோறு ஜனமிருக்கிறது இவர்களெல்லாம் சுற் றினவர்களாதலால் இவர்களுக்கெல்லாம் நானே சரணு கெதி நான் செத்தபின் இவர்களெல்லாம் அநாதராய் விடுவார்போல் தோன்றுகிறது இப்போது என்னு டைய சாதகம் பார்த்ததில் எனக்கு வயது எழுபத் தைந்து ஆகிறது இன்னும் எத்தனைநாள் இருக்குமோ தெரியாது என் பேரனுக்கு குழந்தை பிறந்து இருக்கி றது அவனுக்கு ஒரு குழந்தை பிறந்து அந்த குழந்தை கையில் தங்கவளையல்போட்டதைஎன்கண்ணால்பார்த்து சந்தோஷமடைந்து அப்புறம் செத்துப்போய்விட்டா லும் நான் மகா பாக்கியவானாக இருப்பேன். இது பரி யந்தம் நான் துணிந்தகாரியம் விடமாட்டேன் எனக்கு விரோதிகளான அநேக சத்துருக்கள் வதையாய்விட்

டது. இனி ஒரு சத்துரு இருக்கிறது. அதையும் நான் வதையாக்குகிறேன். ஆக எல்லாம் கூடி நான் பாக்கிய வானுயிருக்கிறேன். நானொரு பிரபுவாயிருக்கிறேன், நான் சுகிமான், நான் பலவான், நான் குலசிரேஷ்டன், நானே நான், நானே ஞானி, நானே பக்தன் என்னைப்போல விவேகசாலிகளும், பொறுமையுடைய வரும் இந்த லோகத்தில் ஒருவரும் கிடையாது எனக்கு எல்லா பதத்தினுடைய அர்த்தமும் தெரியும். இந்தப்படி சிலகாலம் சில இடங்களில் தானே முளைக்கும் காளான்கள்போலவும், அக்கினியில் தூமம்போலேயும், நீர்மேல் குமுழிபோலேயும் இருக்கும். சரீராதி வஸ்துக்களில் சத்திய புத்தியுடையவராய், சரீராபிமானிகளாய், குதற்க சீலராய், சாது ஜனங்களை நிந்திப்பவராய், இராசச தாமசகுண முடையவராய்,. கோறமுட விர்த்திகளாய், இதுகளால் சித்தபிர்மை அடைந்து மோக வலையிற்சிக்கி அசுத்தமான நரகம் அடைகிறார்கள். இந்தப்படி அநேகநரகம் அநுபவித்த பின் மறுபடியும் பக்ஷி மிருகாதிகளான அசுர யோனிகளாய் பிறப்பார்கள். நரகக்கோட்டையில் வீழ்வதற்கு வாசல்மூன்று அதாவது காமம், குரோதம், லோபம்

ஈஷணாத்திரயத்தினுடைய அநுபவம் யிதுதான் என்ப
தற்கு சந்தேகம் வேண்டாம். ஈஷணாத்திரியமாவது
மனைவி, மக்கள், பொருள் இதுகளின் ஆசையை அடி
யோட விட்டுவிடுவது பரமசுகம் என்பதாக பெரிய
வாள் சம்மதம். ஆனாலும், பொருளானது லோபம்
பொருள் வெகு கோடி இருந்தாலும் லோபம், இல்
லாமற்போனால் அந்தப்பொருளினாலே ஒரு குற்றமு
மில்லை. காமமாவது மனைவி, மனைவி அனேகமிருந்தா
லும் காமம் இல்லாவிட்டால் அதனால் ஒருகுற்றமில்லை.
மூன்றாவது புத்திரர் அதானது குரோதம், புத்திரர்கள்
அநேகமிருந்தாலும் அதுகளிடத்தில் குரோதமில்லா
விட்டால் அதினாலும் குற்றமில்லை. இந்தப்படி திரி
லோக ஐஸ்வரியங்கள் அளவிறந்தது. இருந்தாலும்
முன் கூறிய காம, குரோத, லோபம் இம்மூன்றும்
இல்லாவிட்டால் அவன் ஜெனகராஜன் முதலானவர்க
ளைப் போல சம்சாரத்தோடு ஒத்திருந்தாலும் அருடக்
கியானியாம் என்பதற்குச் சந்தேகம் வேண்டாம். ஓம
கனே யின்னும்கேள். முன்கூறிய. காம குரோத. லோ
ப மூன்றுக்கும் காரணம் மனசினுடைய மகா மோகம்
அதுவே எமபாசம் இதுதான் கால் கை விலங்கு இது

நாலும் தாமிச, அந்தகாரம், ஆதலால் இது நாலும் தள்ளிவிட்டு மனசுத்தி வரும் பொருட்டு வேண்டியகர்மம் அவாளவாளதிகாரத்துக்கு தகுந்தபடி சத்கருமங்களை செய்து பழகிவருவதும் அதாவது பரகெதியடையும் பொருட்டு அபேக்ஷையும் வர்ணாஸ்ரமங்கள் தவறாமல் காரியகாரண விதியில் நிஷேதங்களான குணதோஷங்களை சாஸ்திரானுசார பிரமாணங்களை அநுசரித்தும், பெரியோர்களிடத்தும், ஆலோசித்தும், நிச்சயம் செய்தும், தர்மசாஸ்திர விதியை அநுசரித்தும், பலாபேக்ஷையின்றி முன் கூறிய சத்கர்மங்களைச் செய்யவேண்டும். இந்தப்படி செய்வது ஞாயமான விதிஇதனால் ஒரு பாபமும், விபரீதமும் அடையமாட்டாது. இந்தப்படி சூக்ஷ்ம தர்மம் தெரியாமல் அநேக தர்மகர்மங்களை ச்செய்தாலும் அதனுடையபலனாவது விபரீதமாயிருக்கும். அதாவது சுகம், துக்கம், சம்மிஸ்சுரம் முன் கூறிய தாற்ப்பரியம். கர்ம முடிவே மோக்ஷம் அதாவது கர்மம் முடிவதற்கு தக்கதாக ஒரு கர்மம் வேண்டுவது அவசியம். அதாவது திருவித கரணங்களினாலும் செய்யப்படும். திருவித கர்மங்களும் சுயங்கிருதமாகச் செய்யாமல் முன்

கூறியபடி பெரியவாளிடத்திலாலோசித்து, ஈசுரார்ப்பணம் செய்து பழகிவருவதானால் அது பிர்ம பூசையாம் என்பது நிச்சயம். இதினால் கர்மமும் அதினுடைய சங்கல்ப வாசனையும் நசிக்கும் கர்ம சங்கல்பம் நசித்தால் நிராசையடையும் நிராசையடைந்தால் சென்மசாபல்லியம் அடையலாம். சென்மசாபல்லியமாவது மோக்ஷம். இந்தப்படி நிஷ்காம சத்கர்மத்தினால் சித்தம் சுத்தியடையும் சித்த சுத்தி துவாரசற்குரு தரிசனம் கிடைக்கும் அப்போது சகல கர்மங்களும் அடியோட தள்ளிவிட்டு ஸ்ரீசற்குருவின் திருவடி சேவை செய்து பழகி வருவதானால் திருவருள் கிடைக்கும். திருவருள் கிடைத்த மகான்களுக்கு ஜெனன மரணமேது? சுக துக்கமேது? யிதுகளெல்லாம் மாயா காரியம் என்று மறிக. ஸ்திரபுத்தியுடன் யின்னும் கேள்மகனே. இந்த பிரபஞ்சமானது மாயாபாவனை .பிரபஞ்ச வாழ்க்கையானது சொர்ப்பனம் இதை ஸத்திசெய்வது பரமாத்மா. இந்தபிரபஞ்சமானதுலயமடைந்தாலும் பரமாத்மா ஒருகாலத்திலும் லயமடைகிறதில்லை எல்லாம் பரமாத்மாவில் அடங்கியிருக்கும் பரமாத்மா ஒன்றிலும் அடங்கும் வஸ்த்து வல்ல. முன் கூறின மாயா காரிய

மான பிரபஞ்சம் உண்மையல்ல. அதாவது கிளிஞ்சலில் வெள்ளியும் கட்டையில் கள்வனும் கயற்றில் பாம்பும் ஆகாசத்தில் நீலவர்ணம் போலும் மலடி மைந்தனைப்போல் தாமசகுணம் பெற்ற விக்ஷேப காரியமான அபஞ்சீகிருத பஞ்சபூத சேட்டிதங்களான இந்த பிரபஞ்சமானது இந்திரஜாலக்காரனுடைய மாயா வித்தையை போல் தோற்றுவதும் கண்டு கண்டிருக்கவே கண்ணுக்கு முன்னலே அழிந்து விடுவதும் மாயையுடைய ஜாலம். இந்த மாயைக்கும் இதுக்கு அதிஷ்டானமான அருட்சத்திக்கும் ஆதீனம் பரமாத்மா. வாளும் உறையும் போலும் ஆகாசமும் வாயுவும் போலும் பரமாத்மாவுக்கு பெந்தமும் காரணமும் வேறே கிடையாது. எல்லா வற்றிற்கும் காரணம் பரமாத்மா ஒன்று தான். ஆத்மாவிலிருந்தே சகலமும் உதயம். ஆத்மா இல்லாவிட்டால் ஒன்றுமே கிடையாது. ஆத்மாவிலிருந்தும் அநாத்மா பிறக்குமென்கிற பிரமாணம் சத்தியமல்ல ஏனென்றால் பரமாத்மாவைத் தவிர வேறே ஒன்றுமே யில்லை என்பதற்கு உபநிஷத்து பிரமாணம் உண்டு. அப்படியிருக்க சமுத்திரத்தில் அலைபோல் தோற்றிய மாயா பிரபஞ்சமும் பரபிர்ம

மும் வேறல்ல. ஆகையால் சகலத்திலும் ஆத்மா ஸ்திதிசெய்து கொண்டிருக்கிறது. அதாவது ஆகாசத்தில் நாலு பூதங்களும் கலந்திருந்தாலும் ஆகாசம் அதுகளில் ஒட்டாமல் இருந்ததுபோல ஆத்மாவினிடத்தில் பூதகோடிகளெல்லாம் தன் மாயா வசம் பெந்தப்பட்டு கிடக்கிறது. அதாவது எப்படி என்றால் ஒரு நூலில் பலமணிகள் கோர்க்கப்பட்டது போல ஆத்மா சர்வத்துக்கும் அந்தர்யாமியாயிருந்து தன் மாயையினால் சிருஷ்ட்டி, ஸ்திதி, சங்காரம், திரோபாகம் அனுக்கிறகம் முதலான அய்ந்து தொழில்களும் மற்றும் அனேகமான கிருதிகளெல்லாம் தோற்றிப்பதும் மாயா சூத்திரத்தினால் ஆட்டிவைத்தும் ஆத்மா நிபந்தனுயிருக்கிறது. பரமாத்மா எல்லா வற்றையும் கண்டறியத்தகுந்தது பரமாத்மாவானதை ஒருவராலும் காணக்கூடியதல்ல. ஆனாலும் ஆத்மாவே ஆத்மாவுக்கு அறியக்கூடுமென்பது தாத்ப்பரியம். ஆகாசத்துக்குள் பூதகோடிகளெல்லாம் அடங்கியிருந்தாலும் ஆகாசம் அதுகளை ஒட்டாமலிருந்ததுபோல் ஆத்மா ஒன்றிலும் ஒருகாலத்திலும் பந்திப்பதும் நிவர்த்திப்பதும் கிடையாது. ஆனாலும் மோக்ஷமடையும் பொரு

ட்டு அபேக்ஷையுடைய ஜீவர்களுக்கு மோக்ஷமாவது சேதனு சேதனங்களை பரமாத்மாவிலடக்கி ஆத்மபாவனையால் ஜீவன் முக்தியாம். அதாவது சீவாத்மா பரமாத்மாவில் அய்க்கியமாவது மோக்ஷமென்பதாம். அதாவது ஸ்த்தூல யிந்திரியங்களை சூக்ஷமயிந்திரியங்களிலடக்கி சூக்ஷமயிந்திரியங்களைக் காரணமாம் மனசு கொண்டடக்கி மனசை பரிசுத்தமான அருள்ச்சத்தியிலடக்கி அருளானது விந்துவிலும் விந்துநாதத்திலும் நாதம் சிவதுரியத்திலும் அடக்கி அனுபவிப்பது தான் எதார்த்த ஞானம். ஆனாலும் ஜீவனுக்கு பந்தம் மோக்ஷம் இரண்டும் எதார்த்தமல்ல. ஏனென்றால் அதாவது மாயாபாவனை அந்தமாயாபாவனு சத்தியானது ஆத்மாவுக்கும் அநாத்மாவுக்கும் மத்தியபாகத்திலிருந்து கொண்டு பந்தம் மோக்ஷம் இரண்டுமுள்ளதாய் தோற்றிவிப்பதே சுபாவிகம். இந்த மாயா பாவனைக்கு அதீதமானது பரிசுத்தஆத்மா. மாயாபாவனையால் உண்டு பண்ணி வைத்தது. அசுத்தப் பிரபஞ்சம் கண்ணாலே பார்த்ததும் காதினால் கேட்டதும் மனசினால் நினைத்ததும் எல்லாம் மாயாபாவனையாம். மாயா பாவனைக்கு காரணம் மனம். மனத்துக்கு காரணம்

குணம், மனம் லயமடைந்தால் ஒரு வஸ்த்துவும் கிடையாது. சுருதிவேதாதிகளெல்லாம் மனோலய பரியந்தமிருக்கும். அந்தக்கரண பிர்மத்தினால் உண்மையாய் தோற்றுவதாம். சமஸ்த்த பிரபஞ்சமும் சித்தப்பிரமையடைவதற்கு காரணம் குணவிர்த்தியினுடைய ஆரோபமாம். அதாவது சித்தமும் குணமுங்கூடி பாலும் நீரும் போலும் இரண்டறக் கலந்திருந்ததாதலால் அதை வேறுபாடாக்குவது மகாப்பிரயாசம். ஆனாலும் அம்சபக்ஷியானது அந்த பாலையுண்டு நீரை தள்ளுவதுபோல சித்தத்தில்குணவிகல்பமானது எதார்த்தமல்ல. சித்தமும் குணமும் தம்மில் யாதொரு சம்மந்தமும் கிடையாது. ஆனாலும் சுத்த ஸ்ப்படிக்கத்தின் சமீபத்தில் சிகப்பை சேர்த்தால் அந்த ஸ்ப்படிக்கம் சிகப்பாய் தோற்றுவது சுபாவிகம். ஆனாலும் அந்த ஸ்ப்படிக்கமும் சிகப்பும் தம்மில் யாதொரு சம்மந்தமும் கிடையாது. உள்ளதாய் தோற்றுவது மாயா குண விர்த்திகளாம். மாயாகுண விர்த்திகளில்லாவிட்டால் மானசம் நிர்வாணமாம். இன்னும் கேள் மகனே! ஒரு குளவியானது ஒரு புழுவை தூக்கிக் கொண்டு போய் கூட்டிலே வைத்து அடைத்த பின்

அந்த புழுவுக்கு பூர்வஸ்மரணை விட்டு அந்த குளவி ரூபத்தை கண்டு பயந்து சதா தியானித்துக் கொண்டு இருந்ததினுல் தன் பூர்வ திரேகம் விட்டு குளவிரூபமாய் வந்து விட்டது இதுதான் முன் கூரிய பாவனு சத்தியினுடைய வைபவம். இதற்கு சந்தேகம் வேண்டாம். ஆதலால் மனமானதை ஆத்மாவினிடம் சேர்த்தால் அந்த மனம் ஆத்மபெந்து அநாத்மா வசம் சேர்த்தால் அந்த மனமே ஆத்ம சத்துருவாயிருக்கும் ஆகையால் மனம் சம்சார சிந்தனை விட்டு துரிய நிலையடைந்த குருவின் திருவடியை தியானிப்பதாஞல் மனம் அந்த துரிய நிலையடையும் என்பது தார்ப்பரியம். இதற்கு சந்தேகம் வேண்டாம். ஆத்மாவினைப் பார்ப்பதும் தியானிப்பதும் ஒன்று தான். ஆதலால் இதைத் தவிர நானுவிபகாரமும் மனோலய பரியந்தமிருக்கும். மனமடங்குவது மகாப்பிரயாசம் அதாவது மனதை மறைக்கப்பட்டது. மும்மலங்கள் அந்த மும் மலமாவது ஆணவம், மாயா, கர்மம், இதுகள் மூன்றும் ஞாயமாய் தள்ளி விட்டவர்களுக்கு மனம் தெளிவடைந்து ஸ்ரீ சர்க்குருவின் திருவருள் கிடைக்குமென்பது நிச்சயம். ஓ மகனே கேள்! உன் உடல்

பொருள், ஆவி, மூன்றும் குருவுக்கு சத்தியமாக அர்ப்பணம் செய்து விட்டால் நீ யேது? நின் சரீரமேது? நின் வாக்கேது? நின் மனமேது? மனா நிர்வாணமாம் என்பது தாத்பரியம். நிர்வாணம் என்பதற்கு அர்த்தம் மலமற்ற ஆகாசம் போல் நிர்மலமாய், பரிபூரணமாய், ஆநந்தமாய், அரூபமாய், திவ்விய மங்களசுயஞ்சோதியாய், சத்தியமாய், நித்திய நிஷ்க்கள நிராமயமாய், சாந்தமாய், ஏகாந்தமாய், எங்குமாய், எளிதாய், அங்குமாய்அகண்டமாய், அதீதமாய், ஆதியந்தமனாதியாய். சோதியாய், பரமபுராதனமாய், பராபரமாய், நிர்விகல்ப்ப சமாதியாயிருப்பது. நிர்வாணபதம் என்றறிக. இப்படிக்கொத்த நிர்வாண பதம் பரமானந்த சுகம்சத்தியமென்றெண்ணி தேகமே. நித்தியம். போகமே சத்தியமென்றும் தோற்றுவதற்குக் காரணம் முன்கூறிய ஆணவாதி மும்மலங்களாம். மும்மலமாவது ஆணவம், மாயா, கர்மம் மூன்று. ஆணவம் என்பதற்கு அர்த்தம் நானென்கிற அகங்காரத்தினால் சரீரபோக சுகத்துக்கு இச்சை கொள்வதாம். மாயை என்பதற்கு அர்த்தம் மனோசங்கல்ப்பமாம். கர்மம் என்பதற்கு அர்த்தம் காமத்தினால் செய்யப்படும் கர்மேந்திரியங்களின்

தொழிலாம். இந்தமும் மலங்களும் தாமசாந்தகார மான இருள். இந்த இருள்தான் ஆத்மாவினை மறைக் கின்றது. இந்த இருள் நீங்கி விட்டால் பரமானந்த பதமடையலாம். அதாவது பூமி முதல் பிர்மலோக பரியந்தமுள்ள போகசுகங்களை சுவான வாந்திபோல் தூரத்தள்ளி வைராக்கியத்துடன் ஒரு குருவையடுத்து அன்புடன் பணிவிடை செய்து பழகி வருவதானல் அகங்காரமான ஆணவம் அடியோட நசிக்கும். இரண் டாவது நித்தியம் இன்னது அநித்திய மின்னதென் றறிந்து சத்திய புத்தியுடன் என்றைக்குமுள்ளதெது வது மனசினல் உபாசனை செய்து பழகி வருவதானல் மன சங்கல்ப்பமான மாயா நாசமாம். மூன்ருவது சமாதி யாரும் பழகி வருவதானல் ஆசையாய் செய் யும் கர்மம் அடியோட நசிக்கும். இந்தப்படி அப்பி யாசம் செய்து பழகி வருவதானல் மும்மலங்களும் அறும் மும்மலங்களுமற்ருல் அகப்பற்றும் புறப்பற்றும் அறும். அகப்பற்றும் புறப்பற்றும் அற்ருல் ஞான சாதனம்நான்கும் அடையலாம். ஞானசாதன நான்கும் அடைந்தால் சற்குரு தெரிசனமாகும். சற்குருவின் தெரிசனமானல் அருள்ஞானம் அடையலாம். அருள்

ஞானபாவமே சொரூபானந்தம். சொரூபானந்தமடைந்தவாளுக்கு வெட்ட வெளியே சரணாகதி. ஆகாரம், மைதுனம், நித்திரை இவைகளில் சத்திய புத்தியாய் சுகமென்றெண்ணுவோருக்கிந்த பரமசுகம் கிடையாது என்பது நிச்சயம். இதைக் கேட்ட சிஷ்யன் ஓ! சுவாமி மேலருளிய அகப்பற்றுவது என்ன? புறப்பற்றுவது என்ன? ஓ மைந்தனே கேள்! புறப்பற்றுவது மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை. அகப்பற்றுவது ராகத்துவேஷாதி மும்மலங்களுமாம். ஓமகனே கேள்! மனமடங்கி விட்டால் எல்லாமடங்கியிருக்கும் மனமடங்குவதற்கு முதலாவது ஈஸ்வர புத்தியுடன் கர்மங்களைச் செய்து வருவதானால் மனம் தானே அடங்கும். இந்த மனமானது ஆத்மாவினுடைய அம்சம் ஆத்மாவினுடைய அம்சமான மனம் ஆத்மாவை மறைப்பது எப்படி என்றால் சூரிய பகவானுடைய அம்சமான மேகங்களினால் சூரியபகவானை மறைப்பது போல் ஆத்மாவினுடைய அம்சமான மனம் ஆத்மாவை மறைக்குமென்பது தாத்பரியம். இந்தப்படி காரியகாரண சமதெரிசனமடையும்போது மனம் எங்கேயிருக்குமென்றும் நின்னை நீ விசாரித்தறிந்தால்

சகல சந்தேகங்களும்தீரும். சந்தேகமிருக்கிறவர்களுக்கு அனேக குருவிருந்தாலும் சந்தேகம் தீராது. சந்தேகம்தீர்ந்தவாளுக்கு ஒரு குருவே போதும். ஒரு குருவினிடம் விஸ்வாசமுள்ள சிஷ்யனுக்கு குருமொழி ஒரு மொழியே போதும். அதாவது பலமொழியுமடங்கியிருக்கும் குருமொழி ஒரு மொழி மனதிலிருந்தால் அதுவே போதுமென்றும் அதனால் எல்லாம் விளங்குமென்றும் இதன் தாத்பரியம். ஆனாலும் மனோலயமாகும். பொருட்டு முதலாவது சத்திய தர்மாதிகளும் சர்ச்சனங்களின் பாதபூசையும் பகவன்னும சங்கீர்த்தனாதிகளும் நிஷ்காம அனுஷ்டானங்களும் அடிக்கடி செய்து பழகி வருவதானால் மனம் தானே உணரும். மனம் உணர்ந்தால் அதுவே மோக்ஷம். மனமானது ஜாக்கிர, சொர்ப்பன, சுழுத்தி இது மூன்றும் அடைவது பந்தம். மனம் ஜாக்கிரா ஜாக்கிரதையாயிருந்தால் அதுவேமோக்ஷம். இதில்ஜாக்கிரா ஜாக்கிரமாவது, ஜடமேது, ஜெகத்தேது,. பந்தமேது, மோக்ஷமேது, தான் எங்கே இருந்து வந்தது, கடைசியில் எதையடையப்போகிறது, தானேது தன் மாதா, பிதா, மனவி, மக்கள், பொருள் எல்லாம்

எங்கே யிருக்கிறது, இதுகளெல்லாம் சொர்ப்பன மென்றறிந்து உணர்வதுதான் ஜாக்கிர ஜாக்கிரம். இந்த பிரபஞ்சமானது சொர்ப்பனுவஸ்தை. இதற்குக் காரணம் ராஜஸம்ஸ்கா ரசம். இதுகளால் ராகத்துவே ஷாதிக்குக் காரணமாம். நம்முடைய சித்தமானது ஒரு காட்டு வழியில் சத்திரம்போலிருக்கிறது. எதுபோல் என்றால் ஒரு கனவான் ஒரு காட்டுவழியோரம் பரோபகாரம் நல்லதென்றறிந்து, அதற்கு ஒரு தர்ம சத்திரம் கட்டி வைத்து அதாவது நல்ல விசாலமாயிருந்ததாதலால் நானுவிதமான ஜெனங்களும் தினந்தோறு மதிலேவந்தடைந்து போய்க்கொண்டிருந்தார்கள்; அதிலே அனேக புண்ணியவான்களும் அநேக பாபிகளும் கொலை, களவு சூது முதலான கொடிய பஞ்சமா பாதகக்கூட்டங்களும் வந்தடைந்து அதினுல் ஒன்றுக்கொன்று சண்டை பிடித்து கொலை களவு அக்கிரமங்கள் நடத்தி அதினுல் மகாபாபம் மேலிட்டு அதோகெதியடையும் பொருட்டு மார்க்கமாயிற்று. புண்ணியத்திற்காக கட்டி வைத்த சத்திரத்தில் பாபக்கூட்டம் வந்து மேலிட்டதாதலால் இந்தப் புண்ணியசத்திரம் கட்டி வைத்தநானே, இந்தப்பாபத்

அக்குக் காரணம். ஆதலால் என்னை விட்டு இந்தப்பஞ் சமாபாதகம் போகுமா, போகாது. ஆதலால் அதோ கெதிபடைந்து நரகத்துக்கு ஆளாய் வந்து விட்டேன் இப்போது புத்தி வந்தது, இனிமேலாவது மகா பாப த்திற்கிடமான இந்தக் காட்டு மார்க்க சத்திரத்தைப் பரித்து அடியோடு தள்ளி சமபூமியாக்கி ஒரு பூந்தோ ட்டமாக்கினல் அதுவே மெத்தவும் நன்றாயிருக்கும். அதிலுண்டாகும் புஷ்பங்களை எடுத்து சுவாமிக்குப் பூசை செய்யலாம், அதினுல் புண்ணியம் மேலிடும். பாபம் வந்தடையாது. முன் கூறிய பாபக்கூட்டங் கள் வந்தடைவதற்கு இடமில்லை. இந்தப்படி அக்கன வானைப் போல நம்முடைய சித்தமானதை ஒரு பூந் தோட்டமாக்கி விருத்தி செய்தால் புண்ணியமேலிட்டு சுகமடையலாம். அதாவது நம்முடைய இருதயமான காட்டு சத்திரம் சமபூமியாக்குவது எப்படி என்றுல் ராகத்துவேஷாதிக் கேதுவான ராஜஸ தாமசமான கல்லு கட்டைகளைத் தூரத்தள்ளி சாத்வீகத்தினுல் சமபூமியாக்கினுல் அதுவே பூந்தோட்டமாகும். அப் போது ராகத்துவேஷாதிகளான ராக்ஷதகூட்டங்கள் வந்தடையாது. அப்போது அந்தப் பரிசுத்தமான

பூந்தோட்டத்தில் நம்முடைய குருசுவாமியை வைத்துப் பூசை செய்யலாம். நம்முடைய குருசுவாமிகள் எப்போதும் பரமானந்தமாயிருந்தால் அதுவே நமக்கு க்ஷேமம் அப்படிக்கொத்த குருசுவாமியை உள்ளன்பினால் தியானித்துக் கொண்டிருந்தால் அந்தப் பூந்தோட்டத்திற்கு அதுவே வசந்த காலமாம். அந்த வசந்த காற்றினால் இருதயமான பூந்தோட்டத்தில் உண்டான பூஞ்செடியின் மேல் முன் தழைக்கப்பட்ட பாபமான இலைகளெல்லாம் பழுத்து விழுந்து காய்ந்து தூளாய் பறந்து போய் விடும். சுத்த புண்ணிய விசேஷமான தளிர்கள் குளிர்போல் தழைத்து விர்த்தியாகும். அந்தத் தளிர்களால் அலங்காரமாயிருக்கும். அந்த யிடத்தில் சாதுக்களான சகோரபக்ஷிகளுடைய சத்வசனமான மலர்களினால் சோபிதமாயும் சத்வாஸனைகளாகிய் சுகந்த பரிமளத்தோடு கூடியும் சத்பக்த்தியாகிற வள்ளிக்கொடிகளோடு கூடியும் விஞ்ஞானமாகிற அமிர்தப் பிரவாகமாம். செங்காநதியோடு கூடியும் எதார்த்த ஞானமாகிற முக்கிய பலன்களோடு கூடியும் சோபிதமாயும் ஆநந்தமாயும் சுயம் பிரகாசமாயும் இருக்கும் பூந்தோட்டத்தில் நம்முடைய குருசு

வாமி ஆநந்தமாயிருக்கும்போது நாம் எல்லா க்ஷேம முமடையலாம். அநேக ஜன்ம ஜன்மங்களில் செய்தபா பங்களெல்லாம் அடியோடு நாசமடையும் நம்முடைய வம்சம் இருபத்தோரு தலைமுறையுள்ளபிதுர்க்களும் பரகெதியடைவார்கள் மற்றும் பிதிர் தேவாதி சாதுக் களும் சந்தோஷிப்பார்கள் . இதுவுமல்லாமல் லோகமெ ல்லாம் சுத்தமாகும் இதைத்தவிர வேறே ஒருகர்மமும் வேண்டுவதில்லை. எல்லா கர்மத்தின் பலனையும் அடை யலாம். ஆதலால் மகனே கேள். உன்னுடைய சித்தமா னது முன்கூரிய பூந்தோட்டம் போல் பரிசுத்தமாக்கி குரு, சுருதி, யுக்த்தி, அநுபவத்தினல் நீயும் விசாரித் து பார்க்கும் போது சகல சந்தேகங்களும் தீரும். பர மாத்மாவானது எங்கும் பரிபூரணமாயிருந்தாலும் கு ருவருள் பெற்று அசைவற்று ஆனந்தமாயிருந்த சித் தம் சுயம் பிரகாசமாயும் பரிபூரணமாயு மிருக்கும். அ துதான் பரம ரகசியமான சிதம்பரம். அங்கே தான் அம்பிகையுமீசனும் கூடி இரண்டறக்கலந்து விளையாடி சதா நடனமாடிக்கொண்டிருக்கும் கனகசபை. அங்கே கண்டாமணி நாதம் ஆடிக்கொண்டேயிருக்கும். தேவ சமுகங்கள் அநேகம் சூழ்ந்திருக்கும். இன்னும் அநந்த

கல்யாணகுணங்களோடு கூடிய சிதம்பரத்தின் மகிமை அனந்தனும் வாகீஸ்வரியும் புகழ முடியாமல் தோற்று ஒளிந்துபோய் விட்டார்கள். அப்படி இருக்கும் சிதம் பரத்தின் மகிமை இந்த ஏழைக்கு புகலத்தரமா? ஓ மகனே! உன்புத்தியினால் உனக்குள்ளே நீயே விசாரித்து கண்டு தெளிவடைந்து கொள்ளும்போது உன் சந்தேகம் தீரும்.

சிஷ்யன் கேட்கிறான்:—ஓ சுவாமி! அதிசய ஆனந்தமாயிருக்கும் சித்ம்பரத்தின் மகிமையை கேட்ட அடியேன் அந்தகனைப் போலிருக்கிறேன். அப்படியிருக்க, ஆதியந்தமில்லாத சிதம்பரத்தை எப்படி பார்க்கக்கூடும்? அதை பார்க்கும் பொருட்டு வல்லரகசிய மந்திரமோ தந்திரமோயிருந்தால் அடியேனுக்கு உபதேசித்து அருள் செய்து காத்து ரெக்ஷிக்கவேண்டுமென்று குருவின் திருவடிக்குத்தீர்க்கத் தெண்டனிட்டு அஞ்சலியஸ்தனாய் நின்ற சிஷ்யனைப் பார்த்து,

குருவானவர் சொல்லுகிறார்:—ஓ மகனே கேள்! பரிசுத்தமான சிதம்பரத்தை பார்க்கும் பொருட்டு அநேகமான மந்திரகலை, தந்திரகலை, இவைகளினால் காணக்கூடுவதல்ல. அதாவது எப்படி பார்க்கலாம்

என்றால் ஸ்ரீ சர்க்குருவின் திருவருளால் உபதேச கலையினால் பார்க்கக்கூடுமென்பது நிச்சயம். அதாவது மோக்ஷம். இச்சையுடையவர்களுக்கு மோக்ஷம் கொடுக்கத் தகுந்ததாயிந்த புண்ணிய பூமியில் புண்ணிய க்ஷேத்திரங்கள் அனேக முண்டு. இதுகளெல்லாவற்றிலும் சிறந்தது முன் கூறிய சிதம்பரம் ஒன்றேயாம். இதற்கு சந்தேகம் வேண்டாம். அந்த சிதம்பரமானது பரிசுத்தமுடைய இருதயம். ஆனாலும் இருதயமானது ராகத்துவேஷாதி அபிமான விர்த்திகளோடு கூடியிருந்தமட்டும் அது சிதம்பரமாகாது, ராகத்துவேஷாதி அபிமான விர்த்திகளை அடியோட நீக்கி ஸ்ரீ சர்க்குரு உபதேசமாம். அருள்ஞான சத்தியினால் சூக்ஷமாய் பார்க்கும்போது அதுவே சிதம்பரமாம். ஜீவஅய்க்கியத்தை கண்டால் அது கனகசபையாம் என்பது பெரியவாளுடைய சம்மதம். ஆதலால் உன்னுடைய இருதயம் பரிசுத்த மாக்கி சிதம்பரத்தை அடைந்து கனக சபைக் குள்சென்று பரமரகசியத்தை கண்டு பரமானந்தத்தை கொண்டு பரிபூரணமாயிருக்கும் போது அதுவேசிதம்பரம், அதுவே புண்ணியக்ஷேத்திரம் அதற்கு சந்தேகமில்லை. அந்த சிதம்பரமடையும்பொருட்டு உபா

டம் எப்படியென்றால் சரியை, கிரியை, யோகம் இந்த மார்க்கத்தை யனுசரித்துப்போனால் ஞானமாயிருக்கிற சிதம்பரதெரிசனமடையலாம். சரியை, கிரியை, யோகம், ஞானமாவது எதுவென்றால் சற்சங்கமானது, நிற்சங்கம் நிர்ச்சங்கமாவது நிற்மோகம், நிற்மோகமானது நிர்ச்சலதத்துவம். நிர்ச்சலதத்துவமானது ஜீவன் முக்த்தி. இதுவே எதார்த்த ஞானமென்றும், இதுவே சிதம்பர ரகசியமென்றும், முன் கூறிய தாத்பரியம். இதற்கு முதலாவது ஞான சாதனங்கள் நாலுமடைந்து அநுபூதிமானாயிருக்கும் ஒரு பரமாசாரியாரிடம் சேர்ந்து, அவருடைய பாதத்தாமரை மலர்களிரண்டையும் நம்முடைய பரிசுத்தமான இருதயகமலங்கொண்டு யூகமாய் தியானித்து, அந்தத் திருவடியை ஸ்த்திரமாயிருதயத்திலிருத்தி, பூசிப்பவனுக்கு அவனுடைய உள்ளம் சுயம் பிரகாசமானால் அதுவே சிதம்பரமும் கனகசபையுமாம். அது கூடாமல் நம்மனமானது ராகத்துவேஷாதி அபிமானத்தை யடைந்து அதுகளோடு ஐக்கியமாயிருந்தமட்டும் நாமே நமக்கு எமனும். நம்முடைய ஆசையே நமக்கு எமபாசமாம். அந்த ஆசையை விட்டாமலிருந்தது எமதண்டமாம். நிரா

சையடைந்தால் அதுவே முன் கூறிய சிதம்பரமென் பது தாத்டரியம். அதுவானது எந்த வஸ்துவை இரு தயம் கொண்டு தியானிக்கிறதோ, அந்த ரூபமே நா மாகும். பம்பரம்போல் சஞ்சலமான இருதயம் அநேக நாமரூப சங்கல்ப்பம் அடைவதாதலால் அந்தந்த சம யங்களில் மனமும் அந்தந்த ரூபமாயிருக்கும். எந்த ரூபத்தை ஸ்த்திரமாயிருதயத்தில் நிலை நிறுத்திக்கொ ண்டிருக்கிறதோ அந்த ரூபமும் இருதயமும் இரண் டல்ல. எந்த வஸ்துவை இருதயங்கொண்டு தியானி க்கிறதோ அந்த வஸ்த்துவே இருதயத்தில் கடைசியில் நிலை நிற்கும். மரண சமயத்தில் தான் எந்த ரூபம் நினைத்ததோ அந்த ரூபம் அடுத்த ஜென்மமெடுக்கும் இது நிச்சயம். இதற்கு உதாரணம் முன்கூறிய குளவி யே ஒரு குரு. அப்படி யிருக்க சிந்தையற்ற சிதம்ப ரமே பெந்த மற்ற மோக்ஷ வீடு. ஈசனிருக்குமிடம் எங்கும் தேடியலையவேண்டாம். பரமேஸ்வரானவர் எங்கும் பரிபூரணரானாலும் ஆசையற்ற இடத்தில் திருவடி விளங்கியிருக்கும். அங்கே அம்பிகை ஈசனும் கூடி விளையாடி நிற்குர். அங்கே அடுத்தாலருள் பிர சாதம் கிடைக்கும். அதினால் ஆனந்தப் பிராப்த்தி

அடையலாம் என்பதாக புராண இதிகாசங்களும் சொல்லியிருப்பதாக பெரியவாள் சம்மதம். அதாவது ஜீவனுக்கு அநர்த்த நிவர்த்தி, ஆனந்தப் பிராப்த்தி இதில் ஒரு பங்குழியில் விழுந்தவன் அதிலிருந்தும் கரையேறுவது அநர்த்த நிவாத்தி கரையேறிப் பின் தன் பூர்வ ஐஸ்வரியங்களை அடைந்தது. ஆனந்தப் பிராப்த்தி அதுபோல் மனமானது நிராசையாய் மெள்ளமெள்ள பரமாத்வாவில் சேர்ப்பதானால் அந்தமனசினுடைய கர்ம வாசனையும் மெள்ள மெள்ள நசிக்கும் கர்ம வாசனையற்றால் குணமூன்றுமடங்கும். குணமூன்று மடங்கிவிட்டால் திருவித கர்மங்களும் நசிக்கும். திருவித கர்மங்களும் நசித்தால் அதுவே மோட்சமென்பது தாத்பரியம். விஷயங்களை தியானிக்கும் சித்தம் விடயங்களை சேர்ந்திருக்கும். ஆத்மாவை தியானிக்கும் சித்தம். ஆத்மாவில் ஐயிக்கியமாயிருக்கும். அதாவது மலைபம், வாசனுக்ஷபம், தத்துவ போதம், இம்மூன்றுமடைந்தால் அதுவே விரசைவமென்பது தாத்பரியம். அபேதமாயிருந்ததே வீரசைவம். முன் கூறிய சரியை, கிரியை, யோகம், மூன்றுக்கும் அனுபவம். சாலோகம், சாமீபம், சாரூபம் மூன்

றும் முக்தி. இந்தமூன்று முக்தியும் சரீரமுக்தி சரீர முக்திக்கு புனர் ஜென்மமுண்டு. நாலாம்பதமான ஞானம் ஒன்றே விதேக கைவல்யம், இதையடையும் பொருட்டு முக்கியமானது சிரத்தை. சிரத்தையாவது ஒரு பரமாசாரியாரிடம் சேர்ந்து, சிரத்தை, பக்த்தி, விசுவாசத்துடன் அந்த குருவின் திருவடியை குரங்கு குட்டியைப் போல் விடாமல் பிரம்ம சரியத்திலிருந்தும் குருவினுல் நேமிக்கப்பட்ட விதிப்படி நியமங்களைசெய்யவும் குருவே தெய்வம் இதைத் தவிர வேறொரு தெய்வமும் கிடையாது என்கிற விசுவாசமும் அந்த குருவினிடத்தில் மிகுந்த அன்பினுல் வாக்கு மனக்காயங்களாலும், சேவிப்பதுதான் பக்தி. பக்திக்குமுக்கிய சாதனங்களைந்து அதாவதுசத்தியம், தர்மம், தயா, வித்தியா, தபசு, இவ்வைந்து சாதனங்களிலும் முதலாவது சத்தியம், பிரதானம், சத்தியமான பூமியிற் தர்மமாம். விதை போட்டால் தயவானமுளை முளைக்கும் அந்த தயவானமுளை வளந்து அதை த.ரசான காவல் கார்த்தால், வித்தையான விருட்சம் வளரும். ஞான மாம் பலம் கிடைக்கும். ஆதலால் இவ்வைந்து சாதனங்களும் எல்லோர்க்கும் வேண்டுவதவசியம். இதுக

லேந்துமிருந்தால் எங்கும்க்ஷேமமாயிருக்கலாம். இதை கேட்ட சிஷ்யன் சந்தோஷமாய் ஓ சுவாமி! முன்னருளிய சத்திய தர்மாதிகளடைவது எல்லோருக்கும் க்ஷேமமாமென்பதற்கு சந்தேகமில்லை. ஆனாலும் இதின் பொருளாவது உண்மையாக விளங்கும்படி அடியேனுக்கு அருள் செய்ய வேணும். குரு, மகனே கேள்! முதலாவது சத்தியம். அதாவது காரியகாரண சமதரிசனம். இரண்டாவது ஒரு பிராணிகளையும் கொல்லாமலிருப்பது தர்மம். மூன்றாவது ஜீவகாருண்ணியம் அதாவது தான் கஷ்ட மடைந்தும் அந்நிய சிவர்களை காப்பாற்றுவதாம். நாலாவது வித்தியா, அதாவது ஆத்மா அனாத்மா விவேகத்தினால் ஒரு பிராணிகளிடத்திலும் ஒரு வஸ்துக்களிலும் பேதமில்லாமலிருப்பதாம். அய்ந்தாவது தபசு. அதாவது போகத்துள்ள ஆசையை விட்டு நிராசையாயிருப்பதாம். இது ஐந்துமடைந்தவர்களுக்கு இதுவே மாதா, பிதா, மனவி, மக்கள், சகோதரர்கள் என்பது தாத்பரியம். இதுகளைந்தும் பக்திக்கு முக்கிய சாதனமாம். பக்தியாவது எல்லாவற்றிலும் சிறந்தது. சர்க்குரு பக்திஎன்பதாக முன் கூறியிருக்கிறது. குரு தியான

மாவது பொறிகளைந்தும் இருவிழியாக்கி கரணங்கள் நான்கும் ஒரு வழியாக்கி குணங்கள் மூன்றும் ஒரு குணமாக்கி ஸ்ரீகுருவின்பதமலர்சிரசால்வணங்கி தியானிப்பதும், பூசிப்பதும், ஸ்துதிப்பதும்தான் எல்லாவற்றிலும் சிறந்ததான அனந்நிய பக்தி என்பது தாத்பரியம். இதுவே போகசமாதி. இதனுல் எதார்த்த ஞானமடையலாம். இதற்குச் சந்தேகம் வேண்டாம். இனி ஞானமாவது, முன் கூறிய சமாதி சாதனங்கள் நான்கும் அடைந்த பின் ஸ்ரீ சற்குருவின் திருவருளான மகாவாக்கியாமிர்தசாரமாம். 'தத்துவமசி' என்கிற தாரக மந்திரம் காதில் உபதேசமாம். வர்ணுசாரமாவது எதற்கென்ருல், அது போக சுகத்திற்காக ஏற்படுத்தியதாம். ஆதலால் போகசுகத்தி லாசையிருந்தமட்டும் வர்ணுச்ரமங்கள் தவருமலிருக்கவேண்டியதவசியம். போகத்தி லிச்சை விட்டு மோக்ஷத்தி லிச்சையுடையவர்கள் வைராக்கியத்துடன் தாமசகுண காரியமான வர்ணுச்ரமத்தையும் அதற்கனுசரணமான விதிநிஷேதங்களையும் போகத்துக் கேதுவான காமகர்மங்களை விட்டுவிடவேண்டியதவசியம். எல்லாம் விட்டு சந்நியாசியாய் வந்தவர்கள் முன் கூறியவிதி நிஷேதங்க

ளான குணதோஷங்களை ஆதரிக்கவும், நிந்திக்கவும் செய்ய விதியில்லை. வர்ணாச்ரமம் விட்டு சந்நியாசியாய் வந்தவாள் மறுபடியும் வர்ணாச்ரமத்தை எடுத்து வைதீகமான கர்மங்களை ஆதரித்தாலவன் கர்மசண்டாளனும் என்பதற்கு விதியுண்டு. வர்ணாச்ரமாதி தர்மாசாரங்களும், விதிநிஷேதங்களும் குருவின் திருவடிக்கு சத்தியமாய் சமர்ப்பணம்செய்தவனே சந்நியாசி. மறுபடியும் அதை ஆதரிப்பது அசத்தியமாம். சத்தியமே எல்லாவற்றிலும் சிறந்ததாக முன் கூறியிருக்கிறது. அதாவது, சத்தியமே பிதா, தர்மமே மாதா, ஜீவகாருண்ணியமே மனைவி, வித்தையே மகன், தபசே பந்து, ஞானமே தான். அதாவது சத்தியமே தர்மம், தர்மமே ஜீவகாருண்யம், ஜீவகாருண்யமே வித்தியா, வித்தையே தபசு, தபசே சாந்தம், சாந்தமே நிராசை, நிராசையே ஞானம், ஞானமே பிர்மானந்தமென்றறிக. மகனே கேள்! இந்தப்படி அப்பியாசத்துடன் இவ்வுலகத்தின்கண் சஞ்சரிப்பவர்களுக்கு யாதொரு குறைவுமில்லை என்பது நிச்சயம். இதுகளைந்தும் அநுபவமுடையவர்கள் மகாத்மாக்கள். இதுகளைந்து மிருந்தவர்கள் இந்த ஸ்தூலசரீரம் விட்டுபோ

னும் கூட வரத்தகுந்ததென்றும், இதுவே சத்திய மாய் என்றைக்குமுள்ளதான சாசுவத தர்மமென்றும், அறிய இவைகளில்ல ஏவானாலும் ஒன்றில்லாத பாபிகள் போகிறவழிக்கு "குழைபற்ற ஊசியும் கூடவராது" என்பது நிச்சயம். ஆதலால் முன் கூறிய சத்திய தர் மாதிகளான, சாசுவத தர்மத்தை விட்டுவிடாமல் முன் கூறிய சரியை, கிரியை யோகமார்க்கத்தோடே போய் சுகமாய் நாலாம்பதமான ஆத்மக்கியான மடையலாம். சந்தேகம்வேண்டாம். ஓ வாரீர் மகனே கேள்! அசத் தாயிருக்கும் பிரபஞ்சம் சத்தியமென்றும், சத்தாயி ருக்கும் ஞானம் அசத்தியமென்றும் விபரீதமாய் எண் ணும் மூடர்களுக்கிது விபரீதமாயிருக்கும். இப்படிக் கொத்த விடமூடர்களுக்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் நாலும் எதுவென்றால், தன் சுகத்துக்காக கல்யாணமடையும் பொருட்டு முதலாவது, மெத்தவு மழகுடைய ஒரு பெண்ணினைத் தேடுவதாம். சரியை, அநேகமாய்தேடிக்கண்டதில் தனக்கிதமாயுள்ளபெண் ணினையடுத்து கைபிடித்து .கல்யாணம் பண்ணுவது தான் கிரியை. அதோடுகூடி சேர்ந்து ஆனந்தமாயனு பவிப்பதுதான் யோகம். குழந்தை பிறப்பது தான்

நாலாம்பதமான ஞானம். கெடு நாளிதுகளோ டைக்கிய மாயிருந்ததுதான் அனுபவம். இதுக்குக் கடைசி ரௌரவாதி நரகமாம். சந்தேகம் வேண்டாம். இது வேதங்கள்சொன்னதாம்; பேதம்வேண்டாம். இதைத் தவிர முன் கூறியபடி யுள்ள சத்திய தர்மாதிகளும், பத்தி விசுவாசமும் உடைய மகாத்மாக்கள் எங்கேயிருந்தாலும் பற்றற்று மோக்ஷமாமென்பது தாத்பரியம். இவ்வுலகத்தின்கண் பேதமாவது எப்படியென்றால் பிரகிருதி புருஷனால் வந்ததுதான் பேதம். பிரகிருதி புருஷாள் பேதமாவது, பிரகிருதி வேறு புருஷன் வேறாகப் பாவிப்பது தான் அனேக பேதத்துக்கு காரணம். பிரகிருதி புருஷன் இரண்டும்ஒன்றாகபாவிப்பது தானபேதம். அதாவது, பிரகிருதி புருஷனிலும், புருஷன் பிரகிருதியிலும் அடக்கி பரமாத்மவை உபாசிக்கும்போது பிரகிருதி, புருஷாள் இரண்டும் அந்த பரமாத்மிலே அடங்கியிருக்கும். அப்போது அந்த பிரகிருதி புருஷாள் இரண்டும் கற்பூரதீபம்போ லடங்கியிருக்கும். அதாவது பிரகிருதிபடக்கமானால் புருஷனென்கிற நாமம் கிடையாது. பிரகிருதியாவது கற்பூரம்போலவும், புருஷனாவது தீபம்போலவும் இது

இரண்டும் சேர்ந்து எரிந்தணைந்துவிட்டால் இது இரண்டும் கிடையாது. அதாவது, பிரகிருதியால் தோற்றுவதாம் ஜீவபாவனை. பிரகிருதி இல்லாவிட்டால் ஜீவபாவனை கிடையாது. ஆதலால் பிரகிருதி யடக்கமே ஜீவன்முத்தி. முன் கூறிய பிரகிருதி புருஷாளுடைய விவரமாவது, பிரகிருதி தத்துவங்கள் 24 அதுகளுக்குவிவரம் மூலப்பிரகிருதி 1, மகத்தத்துவம் 1 அகங்காரம் 1, பஞ்ச தன்மாத்திரை 5, மகா பஞ்ச பூதங்களைந்து. ஞான இந்திரியம் 5, கர்ம இந்திரியம் 5 இருதயம் 1, ஆக பிரகிருதி தத்துவங்கள் 24. இந்த பிரகிருதி தத்துவங்கள் 24ம் கூடி தன் புருஷனை ஜீவன் பெந்திக்கப்பட்டது. ஆதலால் சீவன் நானாவிதமாய் அலைவதற்குகாரணம் முன்கூறிய 24 தத்துவங்களையும், சீவனுக்குள்ளே யடக்கும்போது சீவன் சிவனாயிருக்கும். அப்போது பிரகிருதி தத்துவங்கள் ஏகமாய், சிற்சத்தியாய் ஆனந்தமாயிருக்கும். அதாவது, அறிவே சிவம், ஆனந்தமே சத்தி. இந்த பிரகிருதி தத்துவங்களை யடக்குவது மகா பிரயாசை. ஆனாலும் இந்த தத்துவங்களில் பிரதானமானது மனம். இரண்டாவது வாக்கு, மூன்றாவது சரீரம்.

இந்த முக்கரணங்களுமடங்கி விட்டால் பிரகிருதி அடங்கியிருக்கும். இந்த முக்கரணங்களும் அடங்கும் உபாயம் எப்படி என்றால், முக்கரணங்களினாலும் கடவுளை உபாசித்தால் அடங்கும். அதாவது மனதினால் தியானிப்பதும் வாக்கினால் துதிப்பதும் காயத்தினால் நமஸ்காராதி கைங்கரியங்கள் செய்வதும் இந்தப்படி பழகி வருவதானால் பிரகிருதி தானே அடங்கும். இன்னும் கேள் மகனே! முன் கூறிய முக்கரணங்களுமடக்குவதற்கு சுலுவாயும் பரமரகசியமாயுமொரு வழியிருக்கிறது. அதாவது பஞ்சாக்ஷரம். அந்த பஞ்சாக்ஷரத்தின் மகிமை பரமானந்த பதத்திலாசையுடைய புண்ணியாத்மாக்களுக்கு கடவுளை உபாசிக்கும் பொருட்டு அநேக மார்க்கமிருந்தாலும் இரண்டு விதத்திலடங்கியிருக்கும். அதாவது சகுணம், நிர்க்குணம், இரண்டு தான். இதில் நிர்க்குணம் சிரேஷ்டமானாலும் முதலாவது சகுண உபாசனை வேண்டியது அவசியம். சகுணமாவது எது என்றால், கடவுளை மாயாசகிதனாய் உபாசிப்பது தான். அதாவது ஜெகத் சர்வ சராசரத்தையும் யேகமாய்க் கண்டு உபாசிப்பதாம். அதாவது பஞ்சாக்ஷரத்தி லடங்கியிருக்கும்.

பஞ்சாக்ஷரமாவது நமசிவயவென்பதாம். நமசிவய வென்பது பஞ்சமூர்த்தி. பஞ்சமூர்த்தியாவது பிர்மா விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவம் இவர்களுக்கு சுரூபம் பஞ்சபூதாகாரமாம். அதாவது பிரிதிவு, அப்பு, தேய்வு, வாய்வு, ஆகாயம். இதில் முதலாவது நகரம் பூமி. அதாவது மெத்தவும் பொறுமையுடையதாம். இரண்டாவது மகரம், ஜலம்; பரிசுத்தமுடையதாம். மூன்றாவது சிகரம் அக்கினி, சர்வத்தையும் சங்கரிக்கப்படுகிறதாம். நான்காவது வகரம், வாய்வு, மகாபலமுடையது. அஞ்சாவது யகரம். அது ஆகாசம், தெளிவு, ஏகமாய் எங்கும் பரிபூரணமாய் எல்லாவற்றிற்கும் இடம் கொடுக்கத்தகுந்ததாம். ஆதலால் இந்தப்படி மற்றும் அனேக அனேக கல்யாண குணமகிமையுடையது தான் பஞ்சாக்ஷரம். இப்படிக்கொத்த மகிமையுடைய பஞ்சாக்ஷரத்தை குருமுகமாயும் சிரத்தாபக்தியுடன் ஸதாஉபாசித்தால் ஜீவன்முக்தியடையலாம். பஞ்சாக்ஷரம் ஏகஸ்சுரூபமாய் உபாசிப்பது தான் நிர்மல சகுணம் என்பது தாத்பரியம். இந்தப்படி பரிசுத்தமுள்ள பஞ்சாக்ஷரத்தையும் குருபதத்தையும், பிரணவத்தையும், இருதயத்தையும் ஏக

மாய்க்கண்டு உபாசித்து பழகி வருவதனால் திரிகுண ங்களும் பரிசுத்தமடையும். திரிகரணங்களும் பரிசுத்த மடைந்தால் திரிகுணங்களும் ஒடுங்கும். திரிகுணங்க ளும் ஒடுங்கினால் சித்தம் சுயம் பிரகாசமாகும். சுயம் பிரகாசமானால் அதுவே நிர்க்குணமாம். நிர்க்குணமா னது பிரணவகாரமாயும், ஏகமாயும் ஆகாசம் போல் அகண்ட பரிபூரணமாயும் சச்சிதானந்த சுயஞ் சோதி யாயும் உள்ள பரமாத்மாவை ஞேயமாய் உபாசிப்பது தான் நிர்க்குணத்தியானம். மனசுக்கு குணசங்கமி ருந்த மட்டும் நிர்க்குணத்தியானம் செய்ய முடியாது. சகுணத்திலிருந்து நிர்க்குணத்தியானம் செய்தால் சகுணம் நிர்க்குணத்திலடங்கியிருக்கும். சகுணம் நிர்க் குணமிரண்டும் உபாசிப்பவன் யார்? என்று தன்னைத் தான் விசாரித்தறியும்போது சகுண நிர்க்குணமிரண் டிற்கும் அதீதமாயும் சுயம் பிரகாசமாயும் பிர்மானந்த மாயும் விளங்கியிருக்கும் ஆத்மா ஏகமென்றறிக. மகனே கேள்! சிரவணத்தினால் அறியப்பட்ட ஆத்மா வினை மனனம்செய்யும்போது சந்தேகமெல்லாம் தீரும். அதாவது அகாதமாயும், கெம்பீரமாயும் இருந்த சமுத் திரத்தில் உண்டான அலை அடிக்கடி அந்த சமுத்திரத்

திலே தோன்றி ஒடுங்குவதுபோல் பரமாத்மாவிலிருந் தும், மாயையால் தோற்றப்பட்டபிரபஞ்சமும், ஆத்மா விலே தோற்றமும், ஒடுக்கமுமாம். ஆதலால் ஆத்மா வும் பிரபஞ்சமும் வேறல்ல; எல்லாம் பரமாத்மாவாம். பரமாத்மாவைத் தவிர அணுவளவும் அசையாது என் பது நிச்சயமாம். எல்லாம் பரமாத்மாவாகப்பாவிப்பத ஞல் நீயும் பரமாத்மாவாம் என்பது யுக்தி.

அதாவது, சிஷ்யன் ஓ ஆண்டவனே! நின் திரு வடி திருவாய்மலர்ந்தருளிய பஞ்சாக்ஷரத்தின் பொரு ளானதை அடியேனுக்கு உண்மையாக விளங்கும்பொ ருட்டு அருள்செய்து காப்பாற்றி யிரக்ஷிக்கவேணு மென்று அபேக்ஷிக்கிறேன். அதற்கு குருவானவர், புன்சிரிப்புடன் ஒரு வார்த்தை சொன்னதாவது, ஓ மகனே கேள்! பஞ்சாக்ஷரம் 'நமசிவய' என்பதின் மத்தியிலிருந்த சிகரம் அதாவது சிவம். அதற்கு இட பாகமிருந்த மகரமும், நகரமும், விஷ்ணுவும், பிர்மாவு மாம். வலபாகத்துக்கண்ட வகரமும் யகரமும், சுப்பிர மணியனும், சதாசிவனுமாம். இடபாகம், சிருஷ்டி ஸ்திதி, வலதுபாகம், திரோபாகம், அநுக்கிரகம், மத்தி யபாகம், சங்காரம் இதுகள் ஐந்தெழுத்துக்கும் மூல

வித்தானது பிரணவம். ஆதலால் இவைகளைந்தும் பிரணவமாம் என்பது நிச்சயம், ஆதலால் மோக்ஷ சாதன விளக்கமாவது, பஞ்சாக்ஷரம். பஞ்சாக்ஷரமாவது முன் கூறிய ஐந்தெழுத்துமாம். அதாவது ஸ்தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம், முக்தி 5. அதாவது நமசிவ்ய—அதாவது பூமி, ஜலம், தேயு, வாயு, ஆகாயம்5. அதாவது பிர்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் 5. அதாவது சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் திரோபாகம், அநுக்கிரகம் 5. அதாவது மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் 5. இந்தப்படி ஐந்துவித இலக்ஷணத்தோடு கூடியும் பஞ்சவர்ணத்தோடு கூடியுமிருக்கும். இப்படிக்கொத்த மகிமையுடைய பஞ்சாக்ஷரமானது விஸ்வகாரணமாயும், விஸ்வரூபமாயும், விஸ்வத்தில் சராசர சொரூபமாயும், உள்ளும் புறமும் விளங்குகின்ற பஞ்சாக்ஷரமானது ஒருவர்க்கும் தெரியவில்லை, ஏனென்றால் பஞ்சாக்ஷரத்தை தவிர இவ்வுலகில் அணுவளவும் வேறே இல்லை என்பது நிச்சயம். ஆனாலும் இதை ஒருவருக்கும் தெரியாமல் போனதுமறைப்பு அதாவது தன்னைத்தான் மறந்தது மறக்கக்காரணம். மூலாதாரத்தின்கண் அதிபோக

குண்டலி சத்தியின்வசமாய் சிவன் படுத்து தூங்குவ தாதலால் தன்னைத் தான் மறக்க காரணம் தன்னைத் தான் உணர்ந்தறிவதே மாயாஜெயம். அதை யுணர்த்து வதற்கு முதலாவது மூலாதாரத்தின்கண் மறைக்கப் பட்ட குண்டலிசத்தியை அதட்டி எழுப்பும்பொருட்டு ஜீவகாருண்யமுள்ள ஒரு பரமதேசிகரை அடையவே ணும். அதாவது பூர்வ புண்ணியம் பூரணமாகும் போது ஸ்ரீ சற்குருவின் கிருபையினால் குண்டலி சத் தியை உணர்த்தி குண்டலி உணர்ந்து மேல் கிளம்பு மானால் குரு தெரிசனமாகும். குருதெரிசனமானால் பஞ்சாக்ஷரத்தைஉணர்த்தலாம். அதாவது முதல் நகரம் நிஷ்காமகர்மத்தினாலும், பஞ்சாக்ஷர தியானம் செய்து பழகிவருவதாலும் நகரம் உணரும் மறுபடியும் சர்வ கர்மமும், ஈசுரார்ப்பணம் செய்து பஞ்சாக்ஷர தியான மானால் மகரம் உணரும். மறுபடியும் ஸ்ரீ குருவின் திருவடி ஸ்திரமாய் சித்தத்தில் நிறுத்தி பஞ்சாக்ஷரத் தியானம் செய்தால் சிகரமுணரும். மறுபடியும் சரா சரத்துக்கும் அந்திரியாமியான ஆத்மாவினையும் பஞ் சாக்ஷரத்தையும் தியானிப்பதானால் வகரம் உணரும் மறுபடியும் ஸ்ரீ குருவின் திருவருள் பிரகாசத்தினால்

பஞ்சாக்ஷரதியானம் செய்தால், யகரமுணரும். இந்த முறைப்படி பஞ்சாக்ஷரத்தை உணர்த்தி எழுப்பினால், பரமாக்ஷரப்பொருளான சற்குருதெரிசனமாகும். குரு தெரிசனமடைந்தால் ஸ்தூலம் சூக்ஷமம் காரணமான நகர, சிகர, மகரமென்கிற மூன்றுசரீரமும்கிடையாது. மூன்று சரீரமு மடங்கிவிட்டால் முக்குணங்களும் கிடையாது. முக்குணங்களும் விட்டால் முத்தொழி லும் கிடையாது. முத்தொழி லு மில்லாவிட்டால் முக் கரணங்களும் கிடையாது. முக்கரணங்களு மடங்கி விட்டால், மும்மலங்களும் கிடை யாது. மும்மலங்களு மற்றால், வகரமான விந்து யகரமான நாதத்தை காட்டி அருள்நிலையடைந்து அறிவையறிந்து சதாசிவமயமாய் மனோன்மனி விலாசமாய் வீதிபோல் நீதியாய் நிர் விஷய சுத்தமாய் சத்துமாய் சித்துமாய் பரிபூரணானந் தமாய் அதீதமாய் ஓங்கார உச்சிவெளி நிஷ்கள பிர்ம மாய் சிவானுபூதியாய் மவுனசமாதி யடையலாம். இது பஞ்சாக்ஷரத்தின் மகிமை. சமாதியோகமாவது இரண்டு விதம். அதாவது சகளம் நிஷ்களம்இவைகளி லிரண்டும் ஒன்றுதான். இவைகளில் சகளமாவது ஸ்ரீ சற்குருவின் திருவடி சிரசின்மேலும் குருவருள்

பிரணவ சுரூபத்தை சுழிமுனையிலும், பஞ்சாக்ஷரமாவது நாவிலும், மனம் அன்னிய சிந்தனை விட்டு மவுனியாயிருந்து தியானிப்பது சகளம். இதனால் ஸ்வரூபானந்த முத்தி இரண்டாவது நிஷ்களத்தியானமாவது, இந்திரிய கோசரமான நாமரூபங்களை மறந்து அந்தக்கரணமற்று ஆகாசம்போல்பிரமானந்தத்தில் தூங்காமல் தூங்குவதாம் நிஷ்களத்தியானமென்றும் நிர்விகல்ப சமாதியென்றும் பெரியாவாள்சம்மதம். இப்படிக்கொத்த பஞ்சாக்ஷரத்தை சிரத்தாபத்தியுடன் படித்தால் உள்ள பலம்—சர்வபயகரம், சர்வபாபகரம், சர்வவிஷகரம் சர்வரோஹகரம், தீர்க்காயுள், சர்வ லோகரும் வசியமாம். சர்வதாபமும் தீரும், லெக்ஷிமிகடாக்ஷமாகும். பராசத்தியருள், இகலோக, பரலோக, தர்மார்த்த, காம, மோக்ஷமடையலாம். சந்தேகம் வேண்டாம். இப்படிக்கொற்ற மகிமையுடைய பஞ்சாக்ஷரத்தை விட்டவன் இரண்டும் கெட்டவன். பூமியில் பிறந்து விட்ட சமயத்திலே இறந்து விட்டவன் போல் பாழாவான் என்பது தாத்பரியம்.

சிஷ்யன் கேட்கிறான்—ஓ சுவாமி! முன்கூறிய சரியை கிரியை, யோகமார்க்கம் ஒன்று. எல்லாம்

விட்டு பஞ்சாக்ஷரத்தியானம். இந்தப்படி மூன்கூறிய தில் எது சிலாக்கியம்? குரு ஓ மைந்தனே, நின்மனம், புத்தி இரண்டிருந்ததுபோல, சரியை கிரியை, மார்க்க மும் பஞ்சாக்ஷரதியானமார்க்கமும் இருக்கிறது. இவ்வி ரண்டும் ஒரு வழிதான். இரண்டல்ல.

சரியையாவது துற்சங்கம் விட்டு குருவைத் தேடுவதாம். கிரியையாவது ஒரு குருவையடுத்து அன்புடன் பூசிப்பதாம். யோகமாவது குரு அருள். ஞானமாவது அனுபவம். இன்னும் கேள், சரியையா வது இந்திரியங்களை யடக்குவதாம். கிரியையாவது அந்தக்கரணம் அடக்குவது தான். யோகமாவது குண மூன்றுமடக்குவதுதான். ஞானமாவது மாயாஜெயமாம் இன்னும், சரியையாவது சற்சங்கம். கிரியையாவது நிற்சங்கம். யோகமாவது நிராசை. ஞானமாவது நிர்ச் சல பிர்மானந்தம். சரியையாவது சாலோகம். கிரியை யாவது சாமீபம். யோகமாவது சாரூபம். ஞானமா வது சாயுஜ்யபதம். சித்தம் சுத்தம் என்பதற்கு அர்த் தம். அசுத்தம் இல்லையென்பதாம். சித்தம் சமத்துவ மானல் அசுத்தம் அணுவளவும் கிடையாது. சித்தம் சுத்தம் அடைவது எப்படி என்றால், சித்தம் நினைப்ப

தெல்லாம் சத்து ரூபமாயும் கண்ணினுல் பார்த்ததெல்லாம் சித்து ரூபமாயும் காதினுல் கேட்டதெல்லாம் ஆனந்த ரூபமாயும் பாவிப்பது பரிசுத்தமாம். அசத்தாயிருக்கும் வஸ்துக்களை உட்கொள்ளுவது அசுத்தம். சத்தாயிருக்கும் வஸ்துக்களை உட்கொள்ளுவது சுத்தம். எல்லாம் பகவத் சுருபமாகக் கண்டது சுத்தம். சித்தம் அசுத்தமாக்குவது. துராசை சுத்தமடைவது நிராசை, மனசஞ்சலம், அஸ்திரம், மன நிர்ச்சலம், நித்திய நிர்மல நிஷ்களம். அதுவே ஸ்திரம் ஜீவபாவனை அஸ்திரம் ஜெகதீஸ்வர பாவனை ஸ்திரம். ஆத்மாவாணதை சிரவணத்தினுல் கண்டது சாலோகம். மனனத்தினுல் கண்டது சாமீபம். நிதித்தியாசத்தினுல் கண்டது சாரூபம். நிரந்தரமாகக்கண்டதுசாயுச்சியம்.

இதற்கு ஞானம், கர்மம், பக்தி இம்மூன்றும் புருஷார்த்த சாதனங்களாம். இவைகளுக் கதிகார பேதமுண்டு. அதாவது புருஷார்த்த மடையும் பொருட்டு சிரத்தையுடையவர்களுக்கு முக்கிய சாதனம் ஞானம். ஞானத்திலும் சிறந்தது குருபதத்தியானம். கர்மத்திலும் சிறந்தது குருவின் திருவடிபூசையாம். பக்தியிலும் சிறந்தது குரு விசுவாஸமாம். இதுவே எல்

லாவற்றிலும் சிறந்ததென்றும் இதனால் பரம சாந்த மாய் புருஷார்த்தமாகும். என்றும் எல்லா சுருதி வேதாதிகளிலும் எல்லாமகத்துக்களும் எல்லாமத சம்மத மாயும் கூறியிருக்கிறது சத்தியம். இதை உண்மையெ ன்று நம்புவோர்களுக்கு பரம்புருஷார்த்த பரமானந்த பதமடையலாம் என்பதற்குச் சந்தேகம் இல்லையென் றும் ஸ்ரீ சற்குருநாதன் ஸ்ரீசற்குருவின் திருவடி ஆணை சத்தியம்! சத்தியம்!

அருள் ஞானதீபம் சம்பூர்ணம்.

ஸ்ரீ குருசரணம்.



௨

## சாதுங்களின் பாதபூஜை பலன்.

தேவதருவைப்போல் கேட்டவரங் கிடைக்கு மென்பதற்குச் சந்தேகமில்லை. ஸ்ரீம் நாரத பகவான் வாக்கியம்.— பூர்வஜென்மத்தில் நானொரு சூத்திரன் தாசியின் புத்திரனாகப் பிறந்தேன். ஆனாலும் அந்த ஜென்மம் சாதுக்களின் பாதபூஜை செய்து ஜென்ம முடிந்தபின் அதின் பலனாவது இந்த ஜென்மம் பிர்மாவின் புத்திரனாய் நாரதனாகப் பிறந்தேன்.

## ஸ்ரீம் வால்மீகர் வாக்கியம்,

பூர்வ ஜென்மத்தில் நான் ஜாதியில் மலைவேடனாக இருந்தேன். சோரனாய் காட்டுநடுவிலிருந்துகொண்டு அனேகம் பிராணிகளைக் கொன்று தின்றேன். அனேகம் வழிப்பிரயாணிகளின் பொருள் பறித்து அனேகம் வதை செய்தேன் ஆனாலும் சாதுதெரிசனத்தாலும், மராமரேதிதிருநாமஜெபத்தினாலும் எம்மனம்பரிசுத்தமாய் ஈச்செனமம்பிர்மமுனியாய் வால்மீகியாய்வந்தது.

## ஸ்ரீ அகஸ்தியபகவான் அருளியது.

ஆதியகத்திய ரோதிய தத்துவம்
மேதினில் கற்றவர் தீதில் சித்தரே. (1)

மணிகொண்ட யானையெட்டுந் திசைகளெட்டுங் கிரிகளெட்டும் மதியிரெட்டுங், கணிகொண்ட வியாக்கிருதியேழும் மண்டலமேழு மொருகடல்க ளேழும், பணிகொண்ட கலைகளஞ்சும் பூதமஞ்சும் தாரமஞ்சும் பதிகளஞ்சும், அணிகொண்ட மறைநாங்கும் புவனமெல்லாம் படைத்தவன்ற னடிகள்காப்பாம். (2)

தானென்ற ஞானத்தின் பலனைக்கேளு
தலைகீழாய் பஞ்சாக்கினி யிடையில் நின்று
கோனென்ற கோடிகற்பம் தவஞ்செய்த பலமும்
கூறஸ்வமேத யாகம் நூறுகோடி
தேனென்று செப்பலமும் மூவருக்கும்
செகத்தினிலோர் நூறுகற்ப மர்ச்சித்தபலமும்
மூனென்ற ஞானிநிஷ்டை கணஞ்செய்த பலத்துக்கு
ஒவ்வாதுயென்று மறைபுறைக்குந்தானே. (3)

கேளப்பா கெருடன்முன்பு சற்பந்தானுங்
கிட்டவுந்தானில்லாத கெடியைப்போலும்
மாளப்பா யிருள்தானும் சூரியன்முன்நிற்க
மாட்டாது ஓடிப்போம் வரிசைபோலுங்
கேளப்பா பஞ்சதுதான் வடவையனல் முன்பு
கூடியது யில்லாது குறியைப்போலும்

ஆளப்பா வெகுகோடி பாவஞ்செய்தோன்
அருள்ஞானி தனைக்காணி லகன்றுபோமே. (4)
போகாமல் படைத்தவனே ஞானிபாதம்
பூசிப்பன் சிரசில்வைத்து புவனங்காத்தோன்
தாகமாய் ஞானியவன் நினைத்ததெல்லாம்
தலையினுமேல சுமந்து தருவன்பாரு
யேகமாய் புவனமெல்லாம் பெறித்தோன் தானும்
இவன்பின்னே திரிந்திடுவா னிவனைக்காக்க
சாகாத வானவர்க்கும் மனிதருக்கும் ஞானி
சரன்பணியக் கிடைக்குமோ செகத்திற்றனே. (5)
தாமென்ற ஞானிக்கோர் பிடிதான்பிக்ஷை
தனையளித்தார் தங்களுக்கு பலத்தைக்கேளு
கோமென்ற அகரமது நாறு கோடி
கோபுரந்தான் கோடிசெய்த பலத்துக்குமதிகம்
ஊமென்ற நால்வேதஞ் சாங்கமாக
வோதியதோர் அந்தணர்கள் கோடிபேர்க்கு
தேமென்ற அன்னமிட்ட பலத்துக்குமதிகம்
சித்தாந்தம் வேதாந்தம் செப்பும் பாரே. (6)
செப்புமப்பா ஞானியவனிருந்த விடமெல்லாம்
செம்பொன்மணி கைலாயம் வைகுந்தமென்பார்

ஒப்பிலவன் திரிவதெல்லாம் உலகத்துக் கிரட்சை
ஒங்கிலவன் பாதங்கள் பட்டவிடமெல்லாம்
தப்பில்லாயாகாதி செய்த விடமாகும்
தானவனைக்காண சிவதெரிசனமுமாகும்
அப்பாகேள் அவன்வார்த்தை மந்திரமுமாகும்
அதைக்கேட்டால் வேதமென்பார் அறிவுள்
[ளோரே. (7)

## பெரியவாள் அடக்கமானல் சமாதிசெய்தால் அதின் பலனுவது.

பூமியில் ஒருகோடி சிவாலயம் கட்டிவைத்து பூசைபண்ணின பலத்துக்கும் அதிகம். (சமாதிகிரமம்)

நாட்டமுடன் பூரணற்றில் நாடினேர்க்கு
நாதாந்த சமாதியுட நன்மைகேளு
தேட்டமுடன் யெவ்விடமே யானுலென்ன
சிவசிவா அந்திடத்தில் செம்மைபண்ணி
வாட்டமென்ன பத்தடியில் சதுரமாக
மைந்தனே ரெண்டுமுழம் ஆழம்செய்து
ஆட்டமுட னதின்கீழே ஆறடியில் மைந்தா
அப்பனே முச்சாணில் ஆழம்பண்ணே. (1)

பண்ணப்பா அதின்கீழே நாலடியில்
        பதிவான ஆழமது யெண்சாணிளம்
நண்ணப்பா னிதானமதாய் நன்றாய்ச்செய்து
        நலமான கிரமமதில் பிரவேசிக்க
உண்ணப்பா கல்ப்பொடியும் செங்கல்தூளும்
        உத்தமனே திருநீறு மூன்றுமொன்றாய்
முன்னப்பா செய்துகொண்டு பதனம்பண்ணி
        மூர்த்திகர மாவதற்கு முறையைக்கேளே. (2)
கேளப்பாப்பா னுடனே இளநீர்விட்டு
        கிருபையுடன் தண்ணீரும் தேனும் விட்டு
சூளடா அபிஷேகம் நன்றாய்ச்செய்து
        சுத்தமுடன் மேல்துவட்டி சுகமாமைந்தா
ஆளடா அறைதனக்கு பட்டுவஸ்திரம்
        அன்பாக தானணிந்து அதன்மேல் கேளு
மேலடா பாதாதி கேசமட்டும்
        மேன்மையுடன் விபூதிதூளிதமே செய்யே. (3)
செய்யடா விபூதிதூளிதமேசெய்து
        திருவான புருவமதில் திலதம்போட்டு
மெய்யடா தங்கமதால் பட்டம்செய்து
        மேன்மைபெற அஞ்செழுத்தை அதிலேமாரி

பைபடா நெத்திகளில் பட்டங்கட்டி
பரங்கும்பற சுகந்தமலர் மாலைசாத்தி
வைபடா அமுதுகறி வர்க்கம் முன்னே
வைத்தபின்பு தூபமொடு தீபங்காட்டே. (4)
காட்டடா தூபமுடன் தீபங்காட்டி
கருணையுடன் ரதமதின்மேல் கடாக்ஷஞ்செய்து
நாட்டடா மணியோசை சங்கின் ஓசை
நலமான ஜேகண்டி மேளவாத்தியம்
முட்டடா சகலஒலி நாதத்தோடே
முக்கியமாய் ரதமதுவை நடத்திக்கொண்டு
சூட்டடா சமாதினுட வாசல்சென்று
சுகமாக கிரகப்பிரவேசம் பண்ணே. (5)
பண்ணப்பா கிரகமென்ற சமாதினுள்ளே
பதிவான மற்றியென்ற எண்சாண் தன்னில்
நண்ணப்பா தூபமதால் சுற்றிபண்ணி
நாட்டமுடன் அய்யும் கிலியும்சவ்வும் சிவய [நமாவென்று
கண்ணப்பா யீசானப் பார்வையாக
கருணையுடன் தானிருத்தி கனிவாய்மைந்தா
முன்னப்பா செய்துவைத்த முத்தாள்தன்னை
முக்கியமுடன் சிவசியென்றெழுத்திடாயே(6)

எடுத்துநன்றாய் பதாதிகேச மட்டும்
இன்பமுடன் தான்தாளைக் கெட்டிசெய்து
அடுத்துமிக பாதமுதல் புருவம் மட்டும்
அளவாகப் பொடியிட்டு அமிழ்த்திமைந்தா
தொடுத்துமிக புருவமுதல் உச்சிமட்டும்
சொல்லுகிறேன் விபூதியிற் கற்பூரம் சேர்த்து
கொடுத்திமிக அமிழ்த்திநன்றாய் தூபதீபங்
குருவான மூர்த்திகரமாவாயெண்ணே. (7)
எண்ணியே அஞ்செழுத்தை உச்சரித்து
இன்பமுடன் மனல்நிமிர்த்தி திரணைபோட்டு
உன்னியே திரணைநடு லிங்கபீடம்
உத்தமனே தான்வகுத்து உறுதியாக
புண்ணியனே சுகந்தமலர் அர்ச்சனைகள் செய்து
புத்தியுடன் சகலரச வர்க்கம்வைத்து
வன்னியென்ற ருத்திரனை தியானம்பண்ணி
மார்க்கமுடன் மானதமாய் பூசைசெய்யே. (8)
செய்யப்பா மானதமாய் பூசைசெய்து
சிந்தைமன தொன்றாக்கி சிவனைநோக்கி
மெய்யப்பா கோதானம் பூதானங்கள்
மேன்மையுள்ள கன்னிகாதானம் செய்து

கையப்பா தவறுடல் பரந்தனக்கும்
கருணையுடன் பூரிகா தானம் செய்து
மையப்பா மெய்யென்ற குருவைப் போற்றி
மார்க்கமுடன் தன்பதியில் வந்துகேளே. (9)
கேளடா தன்பதியில் வந்திருந்து
கிருபையுடன் சட்ரசவர்க்கம் செய்து
வாளடா குருபதத்தை போற்றிமைந்தா
வணக்கமுடன் குருபூசை வளமாச்செய்து
பாழடா போகாமல் சமாதிமைந்தா
பத்தியுடன் நித்தியமும் பூசைசெய்தால்
கோளடா வாராது சமாதுதன்னில்
குருவான மூர்த்திகரம் அதிகமாமே. (10)
ஆமப்பா அதிகமுள்ள ஆண்பால் தன்னை
அருள்பெருக சமாதுவைக்கும் முறையை
ஓமப்பா உறுதியுள்ள சத்திமாது [சொன்னேன்
உண்மையுடன் மூர்த்திகரமானல்லமைந்தா
தாமப்பா முன்போல சமாதுசெய்து
தண்மையுடன் மேல்திசையில்குகைதான்செய்து
நாமப்பா சொல்லுகிறோம் மூர்த்திகரமான
நாதாந்த மாதுதனை சுகாசனமாச்செய்யே. (11)

செய்யப்பா சுகாசனமாய் தீர்க்கப்பண்ணி
சிவசிவா அபிஷேகம் நன்றாய்ச் செய்து
பெய்யப்பா தெரியாமல் பட்டுவஸ்திரம்
மேன் பெறத்தானணிந்து விபூதிசாத்தி
மையப்பா மையமதில் திலதம்போட்டு
மகத்தான சுகந்தமலர் மாலைசாத்தி
வய்யப்பா தங்கமதால் பட்டம் செய்து
மகத்தான எட்டெழுத்தை மாறிக்கேளே. (12)
கேளடா யெட்டெழுத்தை கால்தலையாய் மாறி
கிருபையுடன் நெற்றிதனில் பட்டங்கட்டி
ஆளடா தூபமுடன் தீபம்செய்து
அருள்பெருகரதமதின் மேலன்பாய்வைத்து
வாளடா மணியோசை சங்கின் ஓசை
மகத்தான ஜெகண்டி நாதம்செய்து
மேளமடா சதமதுவும் வரவே செய்து
வேதாந்தமான நடு குகையில் வைய்யே. 13
வையப்பா கீழ்முகமாய் குகையில் வைத்து
மார்க்கமுடன் செங்கல்லு ப்புநீரும்
மெய்யப்பா மூன்றுபொடி ஒன்றாய்க்கூட்டி
மேன்பிறக் குகைநிறைய அமிழ்த்தி வைத்து

கையப்பா தவறாமல் மனநிறுத்தி கருணையுடன்
சதிரமதாய் திரணைசெய்து
செய்யப்பா திரணைநடு கும்பம் வைத்து
தீர்க்கமுடன் மானதமாய் பூஜைபண்ணே (14)
பண்ணப்பா சகல ரஜ வர்க்கம்வைத்து
பதிவான மகேஸ்வரியை பூஜைசெய்து
கண்ணப்பா தானோக்கி மனதுகூர்ந்து
கன்னிகாதானமுடன் கோதானங்கள்
பொன்னப்பா தான்விளையும் பூமிதானங்கள்
பத்தியுடன் பூரிகாதானஞ் செய்து
நண்ணப்பா தன்பதியில் வந்திருந்து
நாட்டமுடன் குருபூஜை நன்றாய்க்காணே. 15
காணவே குருபூஜை நன்றாய்ச் செய்து
கருணைவளர் சமாதுதனிற்கிடாக்ஷமாக
பூணவே நித்தியமும் பூசைசெய்தால்
பூரணமாய் மூர்த்திகரம் புதுமையாகும்
தோணவே சற்றியுட சமாதுதன்னில் [வேன்
துலக்கவெகு புதுமைகள்தான் யென்னசொல்
பேணவே பூரணமாய் சமாது பூசை
பெருமைவிட்டு உருமையதாய்ச் செய்துபாரே. 61

பாரடா ஆண்ரூபம் முனிதானுச்சு
பதிவான பெண்ரூபம் ரிஷிதானுச்சு
சாரடா ரிஷிமுனிவர் கருணைதன்னைக்
கருணையுடன் கண்டறிந்து பூசைசெய்ய
ஆரடா அறிவார்கள் ஆதி அந்தம்
அரகரா ஆதியந்தம் ஆண்பெண்ணுச்சு
நேரடா ஆண்பெண்ணும் பிறந்தாலென்ன
நேர்மையுள்ள அறிவல்லோ சாக்ஷிதானே. 18

ஸ்ரீ அகஸ்தியபகவான் அருளிய சமாதி கிரியை

பரிபூரணம்.

---

பலசமய மதத்துக்கும் பிதாவாயும் பரமாய் அளவற்ற, ஆகாசம்போல் எங்குமாய் சராசரத்துக்கும் ஆதாரமாயும் விளங்குகின்ற சதுர்முகப் பெருமான் திருவடிக்கமலத்திற்கு அடியேன் அடைக்கலம்.

பல சமய மதசக்திதாய், சர்வாந்தரியாமியாய் பரமானந்தராய் பரம ஆதாரமாயும் விளங்குகின்ற ஸ்ரீ விஷ்ணுபகவான் திருவடிக்கமலமூலத்துக்கு அடியேன் அடைக்கலம். பலசமய மதரக்ஷிதராய் பரிபூரண

சுயஞ்சோதியாய் சர்வாத்மாவாய், சர்வாதாரமாய் விளங்குகின்ற சிவபெருமான் திருவடிக்கமலமூலத்துக்கு அடியேன் அடைக்கலம்.

பராபரமானந்த பரிபூரண சுயஞ்சோதியாய் உபசாந்தமாய் விளங்குகின்ற ஸ்ரீ சற்குருவின் திருவடிக் கமலமூலத்துக்குஅடியேன்அடைக்கலம். சர்வசராசரத்துக்கும் அந்தரியாமியாய் எங்குமாய் சர்வசாக்ஷியாய் ஏகமாய் அரூபமாய் சர்வபரிபூரணானந்தசுயஞ்சோதியாய் விளங்குகின்ற சங்கரநாராயணா! நின் திருவடிக் கமல மூலங்களுக்கும் அடியேன் அடைக்கலம்.

ஆருக்குமடியாராய் அடியார்க்கு மடியாராய், அடியார்களின் திருவடிக்கமலமூலத்துக்கு அடியேன் அடைக்கலம்.

உடல், பொருள், ஆவி மூன்றும் நின் திருவடிக் கர்ப்பணமாம். ஸ்ரீசற்குருவின் திருவடிக்கு அடியேன் அடைக்கலம்.

பரமதேசிகாய பரமானந்தபரி
பூரண பரப்பிரமணே நமா
கண்ணுயிர்க்குயிராய் ஸ்ரீ சற்குருவே
நமோ நமா:



